# சேஷகணேசபுரம் - அருள்வரலாறு
# (நாக அரசன்பேட்டை)

14







(Nagarasanpettai village
Situated 10 kms from Kumbakonam & 2 kms from Tirucherai)

Published by
Sri Arutsakthi Nagarajan
Ritambhara Jnana Sabha, New Delhi
web: http://vaikari.org
Edition : October -2020

ஸ்ரீகுருப்யோ நம:

# சேஷகணேசபுரம் - அருள் வரலாறு
# (நாக அரசன் பேட்டை)

அருட்சக்தி எழுச்சியால் சென்ற *16-08-1966 (ஆடி 31உ)* குருப்பெயர்ச்சி தினம் தொடங்கி *26-08-1966* வெள்ளி இரவு நிறைந்தது

பொருளடக்கம் :

1. பரங்குன்றத்திலிருந்து
2. பரமனின் கருணை
3. 27 ஆம் மாதம் – 27 ஆம் நாள்
4. பெரியவர் மறைவு
5. நாகவல்லானின் வல்லமை
6. மூன்றின் விளக்கமும் பெரியவர் மறைவும்
7. ஆட்கொண்ட அனுமன்
8. அறம் இரண்டு
9. குலமும் குமாரியும்
10. இல்லறம் முடிந்து வல்லமை கூடல்
முடிவுரை

**Free Publication**
**Edition: October -2020**
**Copies – 200**

**Contact: Mobile: 8826400528, 9443094506**

## சேஷகணேசபுரம் - அருள் வரலாறு
## (நாக அரசன் பேட்டை)

ஓம்ஶக்தி! ஜயஶக்தி !

அருளின் பிரபாவத்தால் சென்ற 16-08-1966 ஆம்தேதியில் அருளப்பட்டது. அன்று செவ்வாய்க்கிழமை ஆடிமாத அமாவாசை தினம். ஆறு கிரஹங்கள் ஒன்று சேர்ந்து குருவும் பெயர்கிறார். எப்போதுபோல் அன்றும் நான் அருள்வாக்கு சொல்ல எனது தமையனார் ஶ்ரீராமதுரை ஐயர் எழுதினார். அதுதான் இது. இதன் சுருக்கமாக நான் பலதடவை பல இடங்களில், கும்பாபிஷேக த்தில் என சொல்லியிருக்கிறேன். இப்போது தான் முழுவதுமாக கையெழுத்து நோட்டி லிருந்து கணினியில் அப்படியே தட்டச்சு செய்தேன். அதில் சில வாக்கியங்கள் Edit செய்து இதில் கொண்டுவந்துள்ளேன்.
தயவுசெய்து படித்து நமது கிராமத்தின் தொன்மை பற்றி தெரிந்து கொள்ளுவோம்.
உங்கள்

**அருட்சக்தி**

## 1. பரங்குன்றத்திலிருந்து .....

மாதாவின் அருளே நிறைக எங்கும். அன்னை அகிலத்தில் ஆயிரம் பேராய் நிற்கிறாள். அவளது திருவிளையாடல் அனந்தம். அதிலே ஒன்று இது.

300 ஆண்டுகளுக்கு முன்பு, 30 வயதுடைய மாது ஒருவள், பதியிழந்த காரிகையாய் தன் 2 வயதுடைய ஆண் குழந்தையோடு ஒரு கோவிலில் அன்னையின் திருமுன்பு நிற்கிறாள். அவள் பிறந்தது முக்கூடல். வளர்ந்தது. வளம் கொழிக்கும் வைகை கரையில். மணம் செய்துகொண்டது மதுரையில். இல்லறம் நடத்தியது பழனியம்பதியிலே. விதியால் நாகம் தீண்ட அதாவது அம்மாதரசியின் கணவனை பிணமாய்க்கண்டது பரங்குன்றத்திலே !
ஆதாரமாம் ஆகாரத்தை தேடி அலையும் குடும்பங்களிலே இவளும் ஒருவள். பிணத்தை எரித்து நதியிலே மூழ்கியெழுந்து, திக்கற்ற தனிமரமாய், தன்னருமை செல்வத்தோடே, தனித்து நிற்கையில், தென்திசை நோக்கி

இன்முகம் காட்டி வந்தருகில் நின்றார் ஒரு வயோதிக பெரியார்.

"தாயே! தனயனை பெற்ற நீ கொழுநனை இழந்தாய். செய்வதென்னை?" எனப் புகன்றார்.

"பெரியோய்! புகலரியேன். பேதையின் வாழ்வை நடத்த வகையறியேன். விளங்கும் மார்க்கத்தை விளக்கமுற செய்யவேணும். தந்தை போன்றவரே!" என சொல்லி வணங்கி நின்றாள்.

"பெண்மணி! நீ செய்த புண்ணிய வசத்தால்தான் இப்பிறவி வாய்க்கப்பெற்றது. ஆனால் நீ கைம்மை அடைந்த காரணம் உனக்கு விளக்க தேவையில்லை. உன்னாலும் நீ பெற்ற இந்த மகவாலும் இப்புண்ணிய பூமியின் ஒரு பகுதி பயனடைய போவது திண்ணம் என என் உள்மனம் சொல்கிறது. உலகில் தர்மம் நிலைத்திருப்பது உண்மையானால், தெய்வம் அருள் கொடுப்பது உண்மையானால், நீ என்னை நம்பு. அப்படியானால் என் அந்தராத்மா கூறுவதை உன்னிடம் சொல்கிறேன். நீ நிறைவேற்றுவாயா? "

"ஐயா! நீங்கள் அருளிலும் ஆற்றலிலும் அனுபவத்திலும் பெரியவர். இச்சமயத்தில் என் வாழ்வு தாழ்வு அனைத்தும் எல்லாம் குருதேவர் போன்ற தங்களின் திருமுன்பு விழுந்துவிட்டது. கட்டளை இடவேண்டியது தாங்கள், நிறைவேற்ற வேண்டியது என் பொறுப்பு, அதற்கு வேண்டிய திறமையையும் சேர்த்து அருளவேண்டியது தங்களது கருணைத்திறன். இதோ ! உங்களது புனித வாயால் ஏவப்படும் செயலுக்கு காத்திருக்கும் அடியாள். சொல்லுங்கள் ஸ்வாமி" என வேண்டி நின்றாள்.

"அம்மா! அன்பே! என் தவத்தின் மத்தியில் உன் நினைவு திடீரென தோன்றியதால் உன்னை நோக்கி ஓடோடி வந்தேன். உள்ளிருக்கும் தேவன் உரைக்கிறான் கேள்."

"வேகமாக விரைந்து வடக்கு நோக்கிச்செல். குழந்தையுடன் செல்லும் உனக்கு பசி, தாகம், பிணி ஒன்றும் நெருங்காது. உன் உள் உணர்வு உன்னை எங்கு நிறுத்துகிறதோ அங்கு நின்று இடதுபுறம் திரும்பிப்பார். அங்கு ஆலவாய் இறைவன் சிவபெருமான் கோயில் கொண்டிருப்பான். அந்த இடம்தான் உன் சொந்த இடம். அதுமுதல் அந்த இறைவன்

அருகிலேயே உன் வாழ்நாளின் மீதி நாட்கள் கழிக்கலாம். அன்றுமுதல் கணக்கிட்டு 27 ஆவது மாதம் என்னை அங்கு சந்திக்கலாம்" என்றார் அப்பெரியவர்.

"ஸ்வாமி ! பிறவியின் பேற்றை இன்றுதான் பெற்றேன். சந்திக்கிறேன்" என்று சொல்லி விட்டு அவரிடம் விடைபெற்று வடதிசை நோக்கி செல்லலுற்றாள்.

பெரியவர் சொற்படி நடந்து நடந்து தன் உள்ளுணர்வு உணர்த்திய இடத்தில் நின்று இடதுபுறம் திரும்பினாள். இறைவன் லிங்க உருவில் நின்றான்.

"அப்பா! புழு போன்ற ஜீவனான எனக்கும் இத்தகைய பேறா! என்று வாழ்த்த வகைதெரியாது வணங்கினாள். அங்கேயே கோயிலின் அருகில் குழந்தையுடன் அமர்ந்து விட்டாள்.

அயர்ந்தும் விட்டாள்.

அங்கு இப்போது ஒரு காக்ஷி நம்முன் விரிகிறது.......

அழும் குழந்தையின் அருகிலே வாழும் பாம்பு ஒன்று விரைந்து வருகிறது. அறியாத பேதை அயர்ந்து கிடக்க, புரியாத குழந்தை புலம்பி

அழுகிறது. விரித்த படத்துடன் சீறி வருகிறான் ஒரு செந்நாகன். அந்த லிங்கோத்பவரின் லிங்கபாணம் எத்தனை உயரமோ அத்தனை தூரம் பாலனுக்கும் பாம்புக்கும். சீறி வந்த சென்நாகம் திடீரென சீற்றம் நீங்கி படத்தை குடையாய் மாற்றியது. அதே நேரம் வானம் இருண்டு வருணன் பெய்ய துவங்கினான். விழுந்த மழைத்துளி வனிதையின்மேல் பட்ட காலத்தில் விழித்தெழுந்த அம்மாது கண்ட காக்ஷி மெய் சிலிர்க்க வைத்தது. அஞ்சினாள் அரற்றினாள் ஆனால் கொஞ்சமும் பாம்பும் நகரவில்லை. பாலனும் அசையவில்லை. பெற்ற அன்னையின் முகம் நோக்கி புன் சிரிப்பு காட்டுகிறான் பாலன். அச்சிரிப்பு அவளின் அடிவயிற்றைக் கலக்குகிறது.



## 2. பரமனின் கருணை.

இறைவனையே நீண்டநேரம் வேண்டி வேண்டி அவரது முன்பு கதறினாள். நேரம் நகர்ந்து கொண்டே இருந்தது அதாவது

பொழுது புலரும் தருணம். புலர்ந்த பொழுதிலே எழுந்த மாந்தர் விரைந்தனர் வேலை முகம் நோக்கி. அதிலே சிலர் ஆலயம் முன்பு காரிகையையும் காரிகை அருகே தனயனையும் தனயன் தலைமேலே பாம்பின் படத்தையும் பார்த்து அதிசயித்து நின்றனர் புலம்பிக் கொண்டே வீழ்ந்துகிடக்கும் மாதையும் மௌனமாய் புன்சிரிப்பால் திகழும் முகபொலிவோடு கற்சிலை போன்று அமர்ந்திருக்கும் பாலகனையும் பாலகனுக்கு குடையாய் படம் விரித்து நிற்கும் நாகத்தையும் காண்பவர்களின் கூட்டம் வரவர அதிகமாகிறது. இப்போது புலம்பி கொண்டிருந்த மாது அதாவது இறைவனின் பெயரையே, இறைவனை நோக்கியே புலம்பி கொண்டிருந்த மாது சிறிது உணர்வு வர பெற்றாள். பின்பு அருகிலே அம்மை எழுந்து இருப்பதை பார்த்தாள் அதிலே அருள் ததும்பி வழிந்தது அன்பு ஊற்று எடுத்து பெருக்கெடுத்தது தாய்ப்பாசம் கரை கடந்து, கரையுடைத்து பெருக்கெடுத்து கொண்டிருந்தது. அக்கருணையை வேண்டிக்கதற ஆரம்பித்தாள் அந்த தருணத்திலேயே... கூட்டத்திலே பேச்சும் பயம் கொண்ட

கூக்குரலும் அனுதாப சொற்களும் நிறைய இருந்தது. மக்கள் வேலையை மறந்தனர், வேதனையை அடைந்தனர். விந்தையை காண விளக்கம் வேண்டி அன்னையினிடமும் அப்பரமனிடமும் மக்கள் வேண்டுகோள் விடுக்க ஆரம்பித்தனர். இந்த மாதரசி யார்? நடக்கும் விந்தை எதற்கு? எப்படி அமைந்தது? என்றெல்லாம் ஆராய்ந்து அந்த ஆராய்ச்சியின் முடிவை மட்டும் புகல வைக்கும்படி ஒரு முகமான வேண்டுகோள் விடுத்தனர் மக்கள். தெய்வ நம்பிக்கையும் எவ்வுயிரையும் தன்னுயிர் போல் கருதும் தகைமையும், அன்பும், பண்பும், மிகுந்த பான்மையும் நிறைந்திருந்த காலம் அல்லவா அது. நம்பிய பேரை நம்பியபடியே கரையேற்றும் கருணாகரன் அல்லவா இறைவன்! அருகிலே பெருமையாய் நிற்பவள் ஜகன்மாதா அல்லவா! பெற்ற குழந்தையின் அருகிலேயே பாம்பை கண்டு புலம்பி நிற்கிறாள் ஒரு தாய். மகனுக்காக தாயின் வேண்டுகோள் இங்கே! அடுத்து அந்த தாயின் துன்பம் தீர அவளின் வருத்தம் விலக மாதாவின் குழந்தைகளின் வேண்டுகோள் இங்கே! இரண்டு விதமான வேண்டுகோள்

ஒரே இடத்திலேயே இரண்டு வேறு சூழ்நிலையிலே விடப்படுகிறது.

சூரியன் உதித்து ஐந்து நாழிகைப் பொழுது. சூரியன் தன்கதிரை விஸ்தாரமாய் விரித்து ஒளியை கொடுத்து கொண்டிருக்கிறான். நிகழ்ச்சிகள் நடப்பதெல்லாம் அவனது ஒளியிலே. திடீரென மக்கள் கூட்டத்தின் உயரேயும், பாலனின் தலைக்கு உயிரையும் ஒரு நிழல் சாயை அடித்தது. கண்டோர் வியக்கும் வண்ணம் ஒரு கருடன் வந்து தனது கால்களால் பாம்பை தூக்கி உயர பறந்து விரைந்து விட்டது. மௌனமாய் இருந்த பாலகன் இப்போது வாய்விட்டு அழுகிறான் பாலனின் சிரிப்பு அழுகையாய் மாறியது. தாயின் அழுகை இப்போது சிரிப்பாக மாறுகிறது. என்னே! திருவருளின் தன்மை! வேதனை நிறைந்த கூட்டம் இப்போது வியந்து பார்த்து விசாரிக்க ஆரம்பித்தது. அழும் குழந்தையை அணைத்து எடுத்தாள் அன்னை. குழந்தை அழுது கொண்டிருந்தது. பேசி விளக்க வைக்க முடியாத பக்குவம் அல்லவா அதற்கு.

ஆதலால்தான் அழுதது. அந்த அன்னையை விசாரித்தனர் அண்டையில் உள்ளோர்.

"நீ யார்? இங்கு வந்த விதம் எப்படி? இங்கு நடந்தவை எல்லாம் எதற்கு? எவ்வாறு? என்றெல்லாம் கேட்டனர். அதற்கு அவள் "பெரியோர்களே! அன்னை பெற்ற மக்களுள் நானும் ஒருவள். பாலகனின் தந்தை சென்ற இரண்டு மாதங்களுக்கு முன்பு பாம்பினால் தீண்டப்பட்டு உயிர் துறந்தார். இக்குழந்தை பிறந்து ஈராண்டு ஆகிறது. எங்களுக்கு ஒரு நிரந்தரமான தொழில் இல்லை. எனவே இவரது தந்தை இறந்த அன்று பரமனது கருணையால் இரங்குமனம் கொண்ட ஒரு பெரியவர் ஒருவர் வந்து என்னை பரங்குன்றத்திலிருந்து வடதிசை நோக்கி செல்லும்படி பணித்தார். அது என்னை இங்கு கொணர்ந்து விட்டது. என்னை பிடித்த துன்பமும் விட்டது என்று உணர்கிறேன். அன்புள்ளம் கொண்ட உங்கள் மத்தியிலேயும் என்னை விட்டது. அதனால் நான் ஆண்டவனது கருணைக்குப் பாத்திரமாகி இருப்பதாகவே எண்ணுகிறேன். ஏனென்றால் கடிக்க வந்த பாம்பு குடை விரிக்காது. பயந்து மிரளும் குழந்தையும் சிரிக்காது. பாம்புக்கு

பகையும் உடன் அமையாது. எல்லாம் வேத விகிர்தனின் விளையாட்டு என்றாள்." பேச்சின் பொருளை அறிந்தோர் பலர். அறியாதோர் வியந்து நின்றார் பலர். அடுத்து கர்மத்திலே நாட்டத்துடன் நகர்ந்து விட்டனர் சிலர்.

## 3. 27 ஆம் மாதம் – 27 ஆம் நாள்

இப்படியே நாட்கள் பல நகர்ந்தன அம்மைக்கும் அப்பனுக்கும் அருந்தொண் டாற்றிக் கொண்டு அருமை குழந்தையை அரவணைத்துக் கொண்டும், ஊரில் உள்ளவர்களின் ஒற்றுமைபட்ட அன்பின் துணை கொண்டும் வாழ்ந்து வந்தாள். இறை வழிபாட்டில் ஈடுபட்டிருந்த போதிலும் மறையவர் வரும் காலத்தை மட்டும் அவள் மறக்கவில்லை. இருபத்தி ஆறு மாதங்கள் எண்ணிக் கொண்டு வருகிறாள். 27 ஆம் மாதம் முதல் நாள் ஆற்றிலே நீராடிவிட்டு சேற்றில் மலர்ந்த செந்தாமரையை பறித்துக்கொண்டு புற்றுக்கு அருகில் முளைத்திருக்கும் அருகம்புல்லை எடுத்துக் கொண்டு நெற்றிக்கண்ணுடைய ஈசனுக்கு

பூசனை புரிய வருகிறாள் மகனோடு. அவனுக்கு இப்போது 4 வயது ஆகிறது அல்லவா. துள்ளி குதித்து ஓடி வந்து தன் கைகளால் அவள் கையில் இருக்கும் மலர்களை அள்ளி எடுத்து அம்மையப்பனின் திருவடிகளிலே சூட்டுகிறான். பெரியார் தலையை பிடிப்பார், அடியார் பாதத்தை பிடிப்பார் அல்லவா! தனயனும் தாயும் ஒருமுகப்பட்டு ஆண்டவனின் திருச்சந்நிதி யிலே நின்று தொழுது கொண்டிருக்கும் தருணத்திலே ஒரு அசரீரிவாக்கு அருளிச்செய்தது அந்த பெண்ணின் காதுகளுக்கு மட்டும் கேட்கும்படியாக.

"பெண்ணே நற்பேற்றையுடைய நல்ல மகனைப் பெரும்பாக்கியம் நீ அடைந்து இருக்கின்ற காரணத்தினால் 27 நாட்களுக்குள் நீ இறைவன் திருவடியை அடைவாய். அப்பேற்றை உனக்கு அளிக்கிறோம். உன் மகன் உலகில் விளங்க வல்லான். விளங்க வைத்த பெரியவர் வந்தால் அவனை அவரிடமே விடு". இந்த செய்தியை கேட்ட பொழுதினிலே அம்மாது தான் அடைவது இன்பமா? மகிழ்ச்சியா? துன்பமா? ஆனந்தமா? என தெரியாது வியப்பால்

விதிர்விதிர்த்து உயிரற்ற மரம்போல உணர்வற்று நின்றாள். அச்செய்தி அடுத்தவருக்கு கேட்கவில்லையே ஆனாலும் நாகவல்லவனாகிய சிறுவன்
"அம்மா வேதன் விளம்பியது என்ன?" என்று தாயை உசுப்பி கேட்கிறான் அப்போது அவள் தன்உணர்வோடு ...
"மகனே நம்மையெல்லாம் ஆண்டவன் காப்பாற்றுவதாக சொல்லுகிறான் கண்ணே" என்று கூறினாள். மாற்றிச்சொன்னது ஏன்? என்று அவளுக்கு தெரியவில்லை. இதோ பாருங்கள் மகனின் பதிலை.
"சொல்லப்பட்டது ஒன்று, நீ சொன்னது ஒன்று, ஆண்டவன் சொல்வது அத்தனையும் சத்தியம் அம்மா, மக்கள் தான் அதை மாற்றிக் கொண்டு துன்பப்படுகிறார்கள்"
விளங்காத தாய் விக்கித்து நின்றாள். அப்போது சொல்லிக்கொள்கிறாள் தன்மனதிற்குள்.
"பெறும் உரிமையையாவது ஆண்டவன் எனக்கு கொடுத்தானே! அதை வளர்த்து ஆளாக்கி அறிவூட்டி அது பேசுவதைக் கேட்டு இன்புற்று பேரின்பம் எய்த என்னை வைக்காவிட்டாலும் பெற்று அளிக்கும்

பேற்றையாவது அளித்தானே பெருமான். வல்லான் நாட்டிலே விளங்கட்டும்! பொல்லாத வை அழியட்டும் நல்லவை நடக்கட்டும்." என ஆண்டவனை வணங்கினாள்.

நாட்கள் கழிந்தது. இருபத்தி ஏழாம் மாதத்தின் 27ஆம் நாள் மாலை நேரம் மங்களகரமான அன்னை விரும்பும் அந்திப்பொழுது. தன் செந்நிற கிரணங்களால் உலகை சென்னிறமாக்கிக் கொண்டிருக்கிறான் செங்கதிரோன். ஆடுகளும் மாடுகளும் வீடு நோக்கி வந்து கொண்டிருக்கின்றன. வேலை செய்த மக்களும் வீடு திரும்பிக் கொண்டு இருக்கின்றனர். தினசரி போன்று அன்றும் தாயும் தனயனும் அம்மைக்கும் அப்பனுக்கும் முன் நின்று வணங்கி வழிபட்டு கொண்டிருக்கின்றனர் ஊர் மக்களில் சிலரும் கூடி இருக்கின்றனர் அங்கே. ஆலயத்தின் மாலை மணியோசை மங்களகரமாய் விழுந்து கொண்டிருக்கிறது அமையப்பனின் அடிகளிலே அர்ச்சனைகள் நடக்கின்றன. மாதரசி மனமுருகி இறைவனை

அன்னையையும் தொழுது நிற்கும் அந்த வேளையிலே.....



"சங்கர சங்கர சம்போ சிவ சங்கர சங்கர சம்போ" என்று நாம ஒலி தூரத்தே கேழ்க்கிறது. திசை வந்த பக்கத்திலே மக்கள் திரும்பிப் பார்த்தனர். தூரத்தே கேட்ட நாமாவளி நெருங்கி ஆலயத்தை அணுகியது. ஒலியோடு கூடிய உருவம் இப்போது நாம் பார்க்கக் கூடியதாக இருக்கிறது. வயோதிக பெரியார் பரங்குன்றிலே மகனுக்கும் தாய்க்கும் தக்கவழி புகட்டி அனுப்பிய நாம் பார்த்த அதேபெரியாரே அவர். ஆனால் ஆலயத்தில் அப்போது உள்ள மற்ற மக்களுக்கு அவர் இத்தன்மையர் என தெரியாது. இப்போது அவர் ஆலயத்தை நெருங்கி வந்தபோது நாகவல்லவனாகிய சிறுவன் பெரியாரை நோக்கி நெருங்கி சென்று "உங்களை மிக ஆவலுடன் எதிர்பார்த்தேன் பெரியவர்களே, வழியை உணர்த்த வந்த பெரும் தவத்தோய்!" என்று வணங்கி நின்றான். இப்போது

பெரியவர் உள்ளிட்ட அனைவரும் திருச்சந்நிதியில் நிற்கின்றனர். அம்மையை நோக்கி நின்று கொண்டிருந்த அந்த மாதரசி சொல்கிறாள்

"மகனே நான் சொல்வதை கேள்! உலகத்திற்கெல்லாம் அன்னையும் அப்பனும் ஆண்டவன் ஒருவன் தான். ஆனால் மாயை நம்மையெல்லாம் மயக்கி நமக்கெல்லாம் தனித்தனியே தாய் தந்தையர்களை உண்டுபண்ணி வைத்திருக்கிறது. அப்படிப்பட்ட உனது மாயத்தாய் நான். மாயை மறையும் தன்மை. இந்த தாயும் உன்னை பிரியப்போகிறாள். ஆண்டவனே மறுவுரு கொண்டு வந்ததுபோல் விளங்கும் இப்பெரியவர்தான் இனி உனக்கு எல்லாமாக இருப்பார். அன்று நீ சொன்னாயல்லவா, சொல்லப்பட்டது ஒன்று, சொன்னது ஒன்று என, அதை பூராவாக இப்பொழுது சொல்லிவிட்டேன். எந்தன் தந்தையே! இந்த தநையனை காப்பது ,விளங்க வைப்பது எல்லாம் தங்கள் பொறுப்பு. பொறுபற்ற வரிடம் செயலற்றவரிடம் பொறுப்பை ஒப்படைக்கிறாள். என்னை மன்னித்து அருள வேண்டுகிறேன்" என்று பெரியவரின்

அடிபணிந்து என்றாள். அதிகமான பேச்சுக்கு அடையாளம் மௌனம். இறைவனே முனிவர்களுக்கு எதிரே தென்முகமாய் அமர்ந்து மௌன உபதேசம் செய்கிறார் அல்லவா. எத்தனையோ ஆண்டு காலமாக முடிவு பெறாமல் தினந்தோறும் நடந்துகொண்டே இருக்கும் உபன்யாஸம் அல்லவா அவனுடையது. பேச்சில்லாத விளக்கம் இதுதான்.

கல்லாலின் புடையமர்ந்து
நான்மறை ஆறங்கம் முதல்கற்ற கேள்வி
வல்லார்கள் நால்வர்க்கும்
வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலாய்
எல்லாமாயல்லதுமாய்
இருந்ததனை இருந்தபடியிருந்துகாட்டிச்
சொல்லாமல்சொன்னவரைநினையாமல்
நினைந்துபவத்தொடக்கைவெல்வாம்

இதன்விளக்கம்: கல்லால மரத்தின் (ஆலமரம்) கீழிருந்து, நான்மறை, ஆறுஅங்கம் முதலான வற்றை கற்றுணர்ந்து, கேட்டலில் வல்லுநர்கள் ஆகிய சனகர் முதலிய நான்கு முனிவர்களுக்கும், வாக்கியலைக்கடந்த நிறைவாயும், வேதங்களுக்கு அப்பாற் பட்டதாயும், எல்லாமாயும் அவற்றுள் ஒன்றும் அல்லதுமாயும், உள்ளதன் உண்மையை

உள்ளபடி இருந்து காண்பித்து குறிப்பா லுணர்த்திய தட்சிணாமூர்த்தியை இடைய றாமல் நினைந்து பிறவிக் கட்டாகிய பகையை வெல்லுவோம். இதைப் போன்று பெரியவர் வாய் திறந்து எதுவும் பேசாமல் பாலனை அருகில் அழைத்துக்கொண்டார் பாலனின் முகத்திலே புன்சிரிப்பு பெற்ற அன்னை விட்டுச்செல்ல இருக்கிறாள் தேவஅருள் பெற்ற குழந்தை அல்லவா அவன் பேசாதவள்தான் பெற்ற அன்னை என்பதை உணர்ந்து விட்டான். பெற்ற அன்னையே மாயை அன்னை என்று தன்னை கூறிக் கொண்டு விட்டாளே. பிறகு என்ன?!

அன்னைக்கும் அப்பனுக்கும் தீபத்திலே ஆராதனை நடந்தது. ஆண்டவன் ஜோதி மயமானவன். மக்கள் கற்பூர மயமானவர்கள். தன்னை எரித்துக் கொண்டு ஜோதியிலே கலக்க வேண்டும். அங்கே இரண்டும் ஒன்றாக இயைந்துவிடும். மறுபடி தட்டில் கற்பூரம் காணப்படாது. இந்த தத்துவமே தீபாராதனை யின் அமைந்திருக்கிறது என்பதால் அனைவரும் ஒருமுகமாய் உள்ளம் உருகி நடக்கும் செயலை நினைத்து வியந்து

நின்றனர். அப்போது அப்பனின் கருவறை யிலிருந்து விரைந்து வந்தது ஒரு நாகம். கண்டவர் சிலரே. ஆனால் அவர்களும் கருத்திழுந்து நின்றனர். கண்மூடி மௌனி யாய் கருத்தை ஓரிடத்தில் நிலைத்து புலன் ஐந்துமடக்கி ஒன்றிலேநிலை பொருத்தி நின்ற மாதரசியின் கால்களில் அச்சென்நாகம் தன் பற்களை பதித்தான். அடியார்களின் பாததூளி ஆண்டவனுக்கே உகந்ததல்லவா! ஆகையால் பாதத்தை பற்றுவதால் தனக்கு ஒரு வேளை பரமபதம் கிடைத்தாலும் கிடைக்கலாம் என்ற தன்னலத்தை வேண்டித்தான் அந்த நஞ்சுடையோன். தீண்டி விட்டு, வந்த நிலையிலேயே மறைந்தான். அசைவில்லை. அரற்றவில்லை. பேசவில்லை அந்த மாது. பேச்சு மூச்சற்று விழநின்றாள். பெண்ணரசியை பெரியவர் தாங்கிக் கொள்ள, அனைவரும் திகைக்க அவரின் மடியில் படுத்தாள். காலடியிலே பெற்ற மகன். தலைமாட்டில் பெறாத தந்தை, அதுதான் பெரியார் தலையை பிடிப்பார், அடியார் பாதத்தைப் பிபடிப்பார் என்ற வாக்கிய த்திற்கு இணங்க அதற்கு இலக்கணமாக திகழ்ந்தது இந்த நிகழ்ச்சி.

வியப்பும் திகைப்பும் அடைந்த மக்கள் வேதவிகிர்தனின் பெயரை விளக்கமுற செப்பி வேண்டினார்கள். மக்கள் கூட்டத்திலிருந்து ஒருவன் நான் மாலை போட்டு மந்திரிக்கிறேன் என வந்தான். வந்தவனை விலகிநில் என்று வினவினார் பெரியவர். இதற்குள் பெண்மணியின் மூச்சு அடங்க ஆரம்பித்தது. அப்போது ஆலயத்திலுள்ள மறையோர் அர்ச்சகர் இவர்கள் பெண்ணின் உடலை பிறிதோரிடத்தில் வைக்கலாமா? இது ஆண்டவனின் திருச்சந்நிதி அல்லவா! இங்கு பிண்டத்தின் முடிவு நிகழலாமா? என்றனர். பெரியவர் புன்முறுவலோடு "அன்பர்களே அவனது சந்நிதியில் ஆரம்பம் எது? முடிவு எது? அடியும் முடியும் தெரியாதவனல்லவா அவன். நமது அடியையும் முடியையும் ஆராய மாட்டான். அதனால் அவனுக்கு முன்பு தீண்டத்தகாதது எது? தீண்டதக்தது எது? இருக்கக்கூடாது இருக்கக்கூடியது என்ற பாகுபாடு கிடையாது இறைவனுக்கு. இப்பெண்ணின் மூச்சு அடங்குகிறது. இதை பிணம் என்கிறோம். இந்த பெயர் முன்னரேயே அமைந்திருந்தால் தான்

பின்னால் அது வழங்கப்படும். நம் உள்ளும் அந்த மூச்சுக் காற்று இருக்கிறது அந்தக் காற்று என்ற ஒரு நாள் வெளியேயும் செல்லப் போகிறது ஆகையால் இந்த சாகும் பிணத்தின் அடியிலே இந்த சாகாப்பிணம் இருக்கிறது. எங்கும் உள்ள இறைவன் இங்கும் இருக்கிறான். இங்குள்ளவன்தான் எங்கும் இருக்கிறான். நீங்கள் இந்த உடலை எங்கு கொண்டு சென்று போட்டாலும் அங்கும் இறைவன் முன்தான் போட வேண்டும். அவன் சன்னதிக்கு அப்பால் இந்த உடலை எங்கும் நீங்கள் போட முடியாது ஆகவே அங்கிருப்பது இங்கேயே இருக்கட்டும் என்றார். அனைவரும் வாயடைத்து போய் நிற்க, மகனின் கண்ணீர் சேர்ந்தது. என்ன இருந்தாலும் பெற்ற அன்னைப் பாசம் அல்லவா! பெரியவர் கண்மூடி அமர்ந்து இருக்கிறார். சிலபொழுது இப்படியே சென்றது. மாதரசியின் உடலோடு பெரியவர் கிளம்பினார். பக்கத்திலே பலர் உதவினர். இருவர் பாதத்தைப் பிடிக்க முன்னே இருவர் செல்ல உடலை சுமந்து கொண்டு சென்று பெரியவர் குறிப்பிட்ட இடத்தில் வைத்து தன் கையால் அவனது அன்னைக்கு தீ

மூட்டப்பட்டு சடலம் தீக்கிரையானது. சுமந்த கடமைக்கு தனயன் கடமை ஆற்றிவிட்டான்,

மறுநாள் எரித்த எலும்பை பொறுக்கி குண்டத்தில் எடுத்து ஆற்றில் விட்டனர் பெரியவரும் சிறுவனும். யாருக்கோ எங்கோ பிறந்து இங்கு வந்து யாருக்கோ எங்கோ ஈமக்கடன் முடிக்கிறார் பெரியவர். இனி பாலனை பெரியவரின் விருப்பப்படி நாகவல்லான் என்று நாம் அழைப்போம். எந்த இடத்திலேயே அவளின் சடலம் எரிக்கப்பட்டதோ அந்த இடத்திலேயே பெரியவர் சொற்படி ஊரில் உள்ள அன்பு மனிதர்களின் உறுதுணையால் பெரியவரும் நாகவல்லவனும் தங்க ஒரு குடில் எழுந்தது. எழுந்த குடிலிலே விழுந்து கிடந்தனர் இருவரும். அம்மையப்பனின் திருக்கோயில் விளங்க வைத்துக்கொண்டிருக்கிறார். அவனுக்கு வேதங்கள், புராணங்கள், உபநிடதங்கள், முதலியவைகளை விளங்கிக் கொள்ள நீண்டநாட்கள் ஆகவில்லை. பெரியவரின் வாக்கு வைபவத்தால் வேதவிகிர்தன் கோவில் விளங்க ஆரம்பித்தது. ஆலயம் தொழுத மக்கள்

நாநயம் பெற்ற நாகவல்லானையும் பெரியவரையும் சேர்த்து வணங்க ஆரம்பித்தனர்.

## 4.பெரியவர் மறைவு

ஒவ்வொரு சுவாதி, விசாகநக்ஷத்திர தினங்களில் நாகவல்லவனின் நீண்ட சொற்பொழிவு நடைபெற ஆரம்பித்தது. சொல்லிலே அழுத்தம், ஆனால் நயத்தோடு கூடிய சொல். சொல்லிலே பொருட்செறிவு ஆனால் விளங்கும் தன்மையோடு கூடிய ஆற்றல் மிக்கவனாக திகழ்ந்தான் இயற்கையிலேயே அவன் சொல்வன்மை பெற்றிருந்தனால் பெரியவருக்கு தன் திறமையை ஏற்றும் சிரமம் இருக்கவில்லை. ஒருவேளை உணவு கொண்ட கொண்டான் பாலன் ஊரினர் உதவியால். பெரியவர் எங்கு உணவு கொள்கிறார் என்பது அறிய முடியாத செயலாக இருந்தது. திருவருளின் துணையால் அவர்களது வழிபாட்டு விசேஷத்தால் ஒரு காலமே பூசனை நடந்து வந்த கோயில் இப்பொழுது மூன்று காலமும் நடக்கிறது.

மனித கணக்கிலே ஓராண்டு நகர்கிறது. நீராடிவிட்டு வந்த பெரியவர் நாகவல்லானை சீராட்டி அழைத்தார் அருகிலே. “நாகவல்லவா நீ வல்லவன். நல்லவன். வல்லவனாய் நல்லவனாய் வளர்க்கப்பட்டாய். அல்லசெயல் நீக்கி நல்ல செயலில் ஈடுபடுகிறாய். எல்லாவற்றையும் விளங்க வைக்கிறாய். வேத விகிர்தன் உனக்கு எல்லாவற்றையும் விளங்க வைக்கிறான். உனக்கு இனி ஆசான் தேவையில்லை. எல்லாம் உனக்கு வரும் ஈசனருள் இருக்கும் தன்மையினால் என்று சொல்லி வரும்போதே குறுக்கிடுகிறான் நாகவல்லவன்.

“சுவாமி மன்னித்தருள வேண்டுகிறேன் பேச்சிலேயே குறுக்கிட்டமைக்கு. மன்னிக்க வேண்டும். உங்கள் நோக்கம் புரிகிறது. உங்கள் பேச்சும் அதற்கு ஏற்ப அமைகிறது. விட்டுச்செல்ல உள்ளம் உணர்த்தினால் கூட்டிச்செல்லுங்கள் என்னையும், அருளிருக்கும் இடத்திலேயே ஈசன் இருத்தல் வேண்டும், ஈசன் இருக்கும் இடத்திலேயே ஆலயம் அமைப்பது போல் தாங்கள் இருக்கும் இடத்திலேயே நாகவல்லவனும்

இருக்க வேண்டும் சுவாமி" என்று பிரியமாய் அடக்கமாய் பொழிந்தான்.

"அறிவே என்னை அடக்க பார்க்கிறாயா! விட்டு செல்வதென்றால் உடலை விட்டு செல்ல போகிறேன். உன் உள்ளத்தை விட்டு செல்லவில்லை. உணர்ந்து கொண்டாயா உத்தமனே" என்று கண்ணிலே நீர் சோர சொன்னார். சுவாமி என்று கூறிய நாகவல்லவனின் கண்களிலும் நீர் அரும்பு கட்டியது. ஒன்றுபட்ட உள்ளத்தினராய் வேறுபட்ட வடிவில் சிறுபொழுது நின்றனர் இருவரும் குடிலுக்கு உள்ளே.

இறைவனும் சிறுபொழுது தன் விளையாட்டை நீட்ட விரும்பினான் போலும். வெளியே நாகவல்லவனையும் பெரியவரையும் காணவந்த அடியார் இருவர். ஒருவர் அந்தணர் மற்றவர் வாணியர். பிறப்பால் மாறுபட்டாலும் குணத்தால் ஒன்று பட்டவர். குடிலின் உள்ளே குரல் கேட்டு புறத்தே காத்திருந்தனர்.

உள்ளே ஒளித்து இருவர் குரலையும் ஒன்றுவிடாமல் சிதைவுபடாமல் இருவரும்

கேட்டுவிட்டார்கள். வணங்க வந்தவர் திகைத்து நின்றிருந்தனர். குடிசை தாண்டி வெளியே வந்தனர் வல்லானும் நாகவல்லவரும். வணங்கி நின்றனர் இருவரும். "மெய்யன்பர்களே நலத்தீரோ? என்றார் பெரியவர். அதற்கு அவர்கள் மறுமொழி கூறும் முன் வல்லான் கூறுகிறான். "அவர்கள் நலத்தோர் மட்டுமல்ல, நாம் உள்ளே பேசிக்கொண் டிருந்தபோது வாயிற்புலத்தோர்." என்று. அந்த அந்தணர் பெயர் சிவமூர்த்தி. வல்லானின் வார்த்தையின் பொருள் நயம் உணர்ந்தோர். மற்றவர் வாணியர் பெயர் நனிநாயகர். சிவமூர்த்தியின் முகத்தை நோக்கினார். அவருக்கு இறைவனின் பெயர் சொல்லத்தெரியும். கதை கேட்கத் தெரியும். உணர்ச்சிவசப்படதெரியும். ஆனால் செம்பொருள் உணரும் தன்மையர் அல்லர். ஆதலால் வினாகுறிப்புடன் நண்பரை நோக்கினார்.

"நாம் வந்ததை அவர்கள் பேச்சின் மத்தியிலேயே உணர்ந்து கொண்டதாக உள்ளது அவர்கள்பேச்சு" என்று வியப்பு

மேலிட நனிநாயகரின் குறிப்பு வினாவுக்கு விடையிறுத்தார் சிவமூர்த்தி.

இதுபோல் சில நிகழ்ச்சிகள் நாக வல்லானின் வல்லமையை விளக்கிக் கொண்டு வெளியே தெரிய ஆரம்பித்தன. ஒருநாள் சுவாதி நக்ஷத்திரத்தின் உச்சம். வல்லான் பக்தர் குழாத்தின் முன் அமர்ந்து தன் வல்லமையை விரிக்க, தீபம் ஏற்றும் தருணத்திலேயே பெரியவருக்கு அருகிலேயே வினயமாய் வீற்றிருந்து தன் வாயைத்திறந்து, பிறைசூடிய பெருமானின் பெருமைகளை விளக்க ஆரம்பிக்கிறான். அந்தநேரத்தில் அக்குழந் தையை கண்டவர் பேசி வருகின்றார்கள். "இவன் நான்முகனும் அல்ல. ஏனெனில் அவனுக்கு குழந்தை வரலாறு கிடையாது. ஐம்முகனோ என்றால் அவனுக்கு சிறிய உருவம் கிடையாது. உயரம் அளக்கமுடியாத பெரிய உருவம் அவனுக்கு. இப்போதுதான் புரிகிறது ஆறுமுகந்தான் பால் முகத்தோடு, இன்முகம் காட்டி, இப்போது சொல்முகமாய் அமர்ந்து இருக்கிறான். இவனல்லவோ பிரணவம் உரைத்த பெருமான். அருகிலேயே அமர்ந்து

இருப்பவர்தான் இறைவனோ? இந்த சுவாமிக்கு தான் இந்த நாதன் ப்ரணவம் புகழ்ந்து கொண்டிருக்கிறானோ?" என்று அவனது வடிவழகிலும் அறிவழகிலும் ஈடுபட்டு நின்றனர் மக்கள்.

சொற்பெருக்கை அணைபோட்டு நிறுத்தினான் நாகவல்லான் ஓரிடத்திலே. ஆண்டவனுக்கு ஆராதனை நடந்தது. பேசுகிறான் நாகவல்லான்:
"அடுத்த சுவாதியிலே என் அருகிலே இந்த பெரியவரை காண்பது உங்களால் முடியாது. அவர்கள் இருந்தும் இல்லாமல் இருப்பார். மறைந்தும் மறையாமல் இருப்பார்கள். புரிந்தும் புரியாமல் இருப்பார்கள். அருகிருந்து அறிவுரை கூறி பெருமை ஊட்டி அருமை காட்டி, அரவணைத்து, அன்பு செய்து, ஆட்கொண்டபெருமான் மறையப் போகிறார். ஆகையால் சிறியவன் பிழையை அறியாமல் செய்தால் புரியவைத்து பொறுத்தருள வேண்டுமாய் உங்களையெல்லாம் வேண்டுகிறேன் என்று சமத்காரமாக கூறி, நின்ற மக்களை நோக்கி விளம்பினான் நாகவல்லவன்.

பெரியவர் மறைய போவதை கேட்ட மக்கள் அதிசயித்தனர். அடுத்து நான்கு நாள் கழிந்த பின் மூலத்தின் உச்சியிலே அதாவது மூலநக்ஷத்திரம் முழுவதுமாய் இருக்கும் நாளில் பகல் உச்சிவேளை 15 நாழிகை போதிலே எல்லோரும் பின் தொடர பெரியவர் முன்னேறுகிறார் ஊரின் எல்லையை நோக்கி. ஆற்றங்கரை பசுஞ்சோலை. இனிய சூழ்நிலை. ஏகாந்தமான தனியிடம். உச்சிப்பொழுது ஆனபடியினாலே வெப்ப கதிரோன் வெம்மை கொடுத்து கொண்டிருக்கிறான். ஆற்றங்கரை ஆனதினாலே மணல் திட்டுகள் ஏற்பட்டுள்ளன அந்த இடம். திட்டுக்கு அருகிலேயே மூன்றடி ஆழம் ஒரு பள்ளம். விரைந்து சென்ற பெரியவர் பள்ளத்தில் இறங்கி அமர்ந்தார். "நாகவல்லவா! உன் எளிமையான கைகள் எங்கே காட்டு பார்க்கலாம்" என கேட்டவுடன் "இதோ"! என தன் இரு கரங்களையும் காட்டினான். நீண்ட கரங்களை நயனத்திலே அழுத்திக்கொண்ட பெரியவர் சொல்கிறார். பொறுப்பற்றவரிடம் பொறுப்பைவிட்ட தாய் பொறுப்பைக் கழித்துக் கொண்டாள். ஆனால் பொறுப்பற்றவனை பொறுப்புள்ளவன்

அழைக்கின்ற போது செல்லவேண்டியது அவசியமாக ஆகிறபடியால் பொறுப்புள்ளவரிடமே உன்னை பொருத்திவிட்டு செல்லுகிறேன். உணரும் தன்மையும், ஓதும் திறமையும், சொல்லும் வன்மையும், உன்னிலே பதிந்திருப்பதால் நான் பொறுப்பு அற்றவனாக ஆகிவிடமுடியாது. "வாயுள்ளவன் பிழைப்பான்" என்ற பழமொழி உன்னால் நிலை பெறட்டும்." என்று கூறி யோக சமாதியில் நிலைபெற்று விட்டார். நாகவல்லான் கண்களிலே நீர் சோர, கைகளிலே பெரியவரின் நீர் நிற்க, விரித்த கைகளிலேயே தன் நயனநீரும் விழுந்து, ஒன்றுசேர, பிஞ்சு கரங்களினால் மணலை அள்ளி எடுத்து, மறையவர் தேகத்தை மூடினான்.

## 5.நாகவல்லானின் வல்லமை

இவ்வேலை முடிந்து திரும்ப குடிசையை நோக்கி விரைகிறான். வரும்போதே குடிசை வாசலில் கூட்டம். வந்தவன் முன்னே வேதனை சொல் கேழ்க்கிறது. ஓடோடி வந்தான். யாதென கேட்டான். "நாகம் தீண்டி

விட்டது எந்தன் தந்தையை" என்று ஒரு வயோதிக பெரியவரை காட்டினான் நடுத்தர வயதுடைய ஒருவாலிபன். "செய்வது யாதென உடனே புரியவில்லை. தங்களிடம் அழைத்து வந்தோம்." என்று கூறினார் அருகில் இருந்தோர். "நான் என்ன வைத்தியனா, மாந்திரீகனா, ஒன்றும் அறியாச்சிறுவன், சரி, பரவாயில்லை, எனக்கு ஒரு வழி தோன்றுகிறது, ஆலயத்திற்கு வாருங்கள், அம்மையப்பனிடம் முறையிடுவோம், அவன் விடும் வழி நல்வழி ஆகும்" என்று வல்லான் புகன்று தெய்வ சன்னதிக்கு சென்றான். விஷம் தீண்டிய அவனையும் சன்னதியில் கிடக்க செய்தான். விஷத்தால் மூச்சு இல்லாமல் பிணம்போல கிடந்தான் அவன். இப்பொழுது வல்லான் வாய் மலர்கிறது,

"அம்மையே! அப்பனே! உம்மையே ஏத்தினால்
தம்மையே கொடுக்கும் தகைமையின் பான்மையால்
இம்மையில் இறந்த இம்மனித பிஞ்சை
செம்மையாய் ஆக்கி சீருடன் எழுப்பே!

-என்று இறைவன் திருமுன்பு பாடினான் பாலன் தன் பவளவாய் திறந்து. மனப்பூர்வமாக பிரார்த்தனைக்கு

கட்டுபடுவன் இறைவன். இருகுகின்ற நெஞ்சத்தை தன் நயத்தால் உருகவைக்கும் தன்மையாம் செந்தமிழால் பாடும் சிறியவனின் வேண்டுகோளுக்கு கட்டுப்பட்டான் இறைவன். வேண்டுகோள் அல்ல அது கட்டளையே அல்லவா விட்டிருக் கிறான் ஆண்டவனுக்கு. குழந்தைகள் பெற்றோரிடம் பொருள் கேட்கும் போது இலக்கணப்படியா கேட்கிறது. அதிகாரத் தோடு தான் இருக்கும் அல்லவா! அப்பான்மையிலே கேட்டதாலே இறந்த ஒரு நாழிகை ஆன பின்பும் அம்மனிதன் விழித்தெழுவான் போல துள்ளி எழுந்து போய் தூயவனை வணங்கி நின்றான்.

அன்று முதல் அடிக்கடி இம்மாதிரி நிகழ்ச்சிகள் நடைபெற தொடங்கின. விஷம் தீண்டி வந்தவர்கள் விஷம் நீங்கப் பெற்றார்கள். நெஞ்சில் விஷமுடை யோர் வந்தால் அவ்விஷத்தை நீக்கி சிவத்தை நிறைத்து அனுப்பினான். நோயுடையோர் வந்து நோய் குணம் நீங்கி, இறை குணம் எய்தினர். வாழ்வில் குறையுடையோர் வந்து நிறைவைப் பெற்றுதிரும்பினர். வல்லான்

குடில் மக்களுக்கு பிரார்த்தனை மண்டபமாகவும் வைத்திய நிலையமாகவும், அறிவுரை கேட்கும் ஆலயமாகவும் மாறி வந்ததில் வியப்பில்லை.

சுவாதியில் நடைபெறும் பிரசங்கம் விரிவான முறையிலே பரவி அடிக்கடி வெளியூர்களுக்கு செல்லும் வாய்ப்பு இவருக்கு ஏற்பட்டது. இறைவனின் தன்மை யையும், அவசியத்தையும், மக்கள்வாழ வேண்டிய முறைகள் பற்றியும், அம்பிகையின் அழகு தோற்றத்தையும், விளங்கவைத்துக் கொண்டிருந்தான் மக்களுக்கு நாக்க வல்லவன். நாகவல்ல வனுக்கு இப்போது 17வயது இங்கு ஒரு சிறு மாற்றம் செய்ய வேண்டியுள்ளது.

நாகவல்லவனுக்கு வயது ஏறிவிட்டது, அறிவு ஏறிவிட்டது, ஆற்றலும் ஏறிவிட்டது, ஆகையால் இனி ஒருமையில் குறிப்பிடுவது பெருமையாகாது. நாகவல்லவர் என்று அழைக்கலாம்.

ஒருநாளிரவு சொற்பொழிவு முடிந்து மக்கள் கலைந்த பிறகு, சோர்வோடு அமர்ந்ததார் நாகவல்லவர். அப்போது சிவமூர்த்தியும் நனிநாயகரும் வந்து வணங்கி நின்றனர். "நலமா யாது காரணம்" என கேட்டார் நாகவல்லவர். மறுமொழிகூற சிவமூர்த்தி முயலுகையில் தன் வாழ்நாளில் இதுவரை காணாத காக்ஷி ஒன்றைக் கண்டார். அக்காட்சியை காணும் முன்பு அந்த காக்ஷியை காணும் தகைமை அவருக்கு உரிமைதானா என, அவரது வரலாற்றை சிறிது ஆராய வேண்டியுள்ளது.

சவம். அதுவே சிவமாகிறது. சிவமான வனே சித்தன். அவனே ஞானி. இவை வேதம் சொன்னவை. வேதம் வழியிலே, வேதம் கூறிய நாவின் பரம்பரையில் வந்தவர் சிவமூர்த்தி. தந்தைக்கு ஒரே தனயன் இவர். தாயின் அன்பை பெறாமலேயே உடன் பிரிந்தாள். அன்னை விரிசடை கடவுளுக்கு புரியும் தொண்டே, அவனது திருப்பெயரை நாத்தழும் பேற முழங்குவதே பிறவியின் பயன் என நன்றாய் உணர்ந்த தந்தை, தன் மகனான சிவமூர்த்தியை சான்றோரிடம் படிக்கவிட்டு

ஆண்டவனை புரியவைத்து விட்டார். சிவமூர்த்தி வயது ஏறியபின் படித்த நூலிலே புகழப்படும் சான்றோர் போன்றோர் புவியிலே இருக்கின்றனரா? அவர்களை சார்ந்தடைவது எங்கனம்? என்றெல்லாம் நினைக்கும் தன்மை உடையவராக இருப்பதோடு, எங்கெங்கு சித்தர்கள் இருக்கிறார்களோ, எது எது சித்தர்கணம் வாழ்ந்த இடமுமோ, அங்கெல்லாம் ஒரு ஈடுபாட்டோடு சென்றுவந்தார். வயது ஏற ஏற சிவமூர்த்திக்கு சிவத்தை அறியும் ஆவல் அதிகமாகி, கடைசியில் மனம் உணர்த்தியது நாகவல்லார்தான் அதை உணர்த்த வல்லார் என. அதன்படிதான் அவரிடம் ஈடுபட்டு, அவரது அன்புக்கு பாத்திரமாகி, தொண்டுக்கு உதவி செய்துகொண்டு, பண்டுசெய்த புண்ணியத்தால் இங்கு நிற்கிறார்.

அருகிருந்த நனிநாயகர் அசையாமல் நிற்க, சிவமூர்த்தி எளிதில் காணமுடியாத ஒரு காக்ஷியை கண்டதாக கூறப்பட்டது அல்லவா! அந்த காக்ஷி என்ன? இதுதான். நாகவல்லவர் குடிசையில் தெற்குமுகம் நோக்கி அமர்ந்திருக்கையில் அவரின்

பின்புறம் செந்நாகம் ஒன்று தன் படத்தை விரித்து குடையாய்ப் பிடித்து சித்திரம் போன்று நிற்கிறது. சோர்வோடு கண்மூடி அமர்ந்து இருக்கும் நாகல்லவருக்கு அருகிலே பாம்பை கண்டவுடன் சிவமூர்த்தி, "சுவாமி.........." என தான் கண்டதை கூற அவரை நெருங்கி சென்றபோது, உடனேயே செயலற்று நின்றார். பேச்சற்று நின்றார். இப்போது பாம்பை காணவில்லை நாகவல்லவர்தான் புன்சிரிப்போடு அமர்ந்திருக்கிறார். கண்ணால் காணப்பட்ட காக்ஷிதானா? அல்லது மனத்தால் உணரப்பட்ட பிரமையா என்ற இரண்டு வேறு நினைவிலே தன்னை ஆட்படுத்திக் கொண்டு, இருகைகூப்பி கொண்டிருந்தார் சிந்தையை.

குணமொத்த குணக்குன்றுகளே! அகால நேரத்திலே வந்த காரணம் என்னவோ? என விளம்புகிறார் நாகவல்லவர். வணங்கி நின்ற இருவரும், "சுவாமி! சிவமூர்த்தியின் அகத்திலே சோர்ந்தமர்ந்து இருந்த எங்களுக்கு, சேர்ந்து தங்களை காணவேண்டும் என்ற எண்ணம் உதித்தது. அதனால் ஓடோடி வந்தோம், உங்கள் முன்

நிற்கிறோம்" என்று நனிநாயகர் விளம்பினார். காரணம் தெரியாத காரணத்தினால்தான் நாரரரணர் போன்ற தங்களின் திருமுன்பு நிற்கிறது இந்த மனித உருவங்கள். "காரணம் எங்களை கேட்காதீர்கள் சுவாமி! நாங்கள் அறிய பிறந்தவர்கள். காரணத்தை அறிந்தவர் தாங்கள். தெரிந்து கொள்ளும் திறமையை அளிக்க வேண்டும்" என சிவமூர்த்தி கூறினார். காரணம் அறியும் காலம் வெகு தூரத்தில் இல்லை சிவமூர்த்தி. அதை விளக்குவதற்காகவே சிறிது முன் உணர்த்தப்பட்ட ஒரு தோற்றம் உன் மனதிலே உணர்ந்து கொண்டு இருக்கும் என்றார் நாகவல்லவர். அமைதியாய் நின்ற அவ்விருவரையும் சென்று விட்டு மூன்று நாட்களுக்குப் பிறகு யாருமே வந்து பார்க்காதிருக்கும்படி பார்த்திரும்" என திருவாய் மலர்ந்தது. மறுபடியும் சிவமூர்த்திக்கு காரணம் அறியாத கதை தான். இருந்தாலும் நாகவல்லவரின் சொல்லுக்கு கட்டுப்பட்டு மறுவிளக்கம் கேழ்க்காமல் மௌனமாய் இருவரும் வெளியேறினர்.

மறுநாள் காலை கதிரவன் உதயத்திற்கு ஐந்து நாழிகை முன்பு எழுந்த நாகவல்லவர், விரைந்தார் பெரியவர் சமாதி நோக்கி. பெரியவரை அன்று சமாதிமுகமாய் அமர்த்தியது கிழக்கு. இப்போது அவரது புனிதசமாதிக்கு புறம்பே மேற்கு நோக்கி அமர்ந்தார் நாகவல்லவர். அமர்ந்த உடனே தியானம் தொடர்ந்தது.

"குருவே சகலமும், குருவே தெய்வம், குருவே சிவம், குருவே வணக்கம், குருவே ஆன்மா, என்ற தன்மைகளை உள்ளடக்கி, தான் என்பதை தள்ளி வைத்து, நான் என்பதை நகர்த்தி வைத்து, நீ என்பதை உள்ளிருத்தி, வான் என்பதிலேயே வியாபித்து, கான் என்பதிலே கடிகிச் சென்று, சிவம் என்பதிலே நிலைபெற்று" அமர்ந்து கொண்டிருந்தார் நாகவல்லவர்.
நீர், உணவு இல்லாமல் மூன்று நாட்கள் நித்தியசுகம் எய்திவிட்டு குடிசைக்கு திரும்பினார் அந்த குணக்குன்று. அன்னமின்றி தண்ணீரின்றி அடிக்கடி மூன்று நாட்கள் தியானம் நடைபெற்று வந்தது. சிவமூர்த்திக்கு மட்டும் அவரது

தியானப்பயிற்சி தெரியும். காணவில்லை என்று விசாரித்த மற்றவருக்கு "காணாமல் தான் இருப்பார், கவலைப்பட தேவையில்லை," என்று மறுமொழி மட்டும் கிடைத்துக் கொண்டிருந்தது. உத்திரம், அஸ்தம் சித்திரை, மூன்று நக்ஷத்திரப்பொழுது முழுவதிலும் நாகவல்லவர் தியானயோகபயிற்சி பெரியவரின் சமாதிக்கு முன்பு நடக்கும். சுவாதியிலே பிரசங்கமாரி பொழிவார். அடுத்த உத்திரநக்ஷத்திரம் வரை பலபல இடங்களுக்குச் சென்று தக்கோரை அணுகி பக்குவமாய் பேசி, பிரசங்க ஏற்பாடுகள் செய்து, ஆங்காங்கு பக்திச்சுவை சொட்டச்சொட்ட, பரமனின் திவ்யநாமாக்கள் ஒலிக்க, வாழவேண்டிய வழிமுறைகளை விவரித்துக் கொண்டு, திக்விஜயம் நடைபெறும். சில நாட்கள் ஆலயத்தில் தங்கி வருவோருக்கும் விளங்க வைத்துக் கொண்டிருப்பார். கிராம மக்கள் பத்தி கொண்டனர். நல்லதில் நடக்க நாட்டம் கொண்டனர். சிவமூர்த்தியும், நனிநாயகரும் வெளியூர் செல்லும் இடங்களிலெல்லாம்

உடனிருந்து உறுதுணை புரிவார்கள். எட்டு ஆண்டுகள் இப்படியே இனிதே நடந்தது.

## 6.. மூன்றின் விளக்கமும் பெரியவர் மறைவும்

ஒருநாள் அன்று ஸ்திரவாரம் ஆரம்பத்தில் இருந்த நாகவல்லவரின் தியானம் அன்று இரண்டாம் நாளாக நடந்து கொண்டிருந்தது. மாலை 27 நாழிகை. ஒன்பது ஆண்டுகள் தியானத்திலே அன்று தான் அவருக்கு புறவிழிப்பு ஏற்பட்டது. விழித்த கண்கள் வெளியே நோக்கின. சமாதியின் உள்ளே இருந்த பெரியவர் எதிரே வெளியே நின்று கொண்டு இருக்கிறார். முகத்திலே புன்னகை. கண்ட வல்லார் விழுந்து அடி வணங்கி நின்றார். பெரியவரின் வாய் மலர்கிறது. "அறிவில் நாகவல்லவரே ! விடை கொடுப்பாயா?" எனக்கேட்டார்.
"கொடுப்பதற்கு என்னிடம் என்ன இருக்கிறது? தாங்களாக எடுப்பதற்குத் தான் என்னிடம் இருக்கிறதே தவிர கொடுப்பதற்கு ஒன்றுமே இல்லை. மனிதவாய்க்கு

புனிதமளித்த பெரியவரே! அருள வேண்டுகிறேன். அருளிச்செய்து தரமளிக்க வேண்டுகிறேன்." என்ற நாகவல்லவரின் வார்த்தையைக் கேட்ட பெரியவர் "நாகவல்லவரே நீ விளங்குகிறாய்! "நானை" அழித்து நீ விளங்குகிறாய்! பிறரையும் விளங்க வைக்கும் தன்மை உன்னிடம் இருக்கிறது. உன் தியான யோகத்தால் கலைமகளின் கருணை சடுதியில் கிடைத்தது. மலைமகளின் கருணையால் அவளின் சிபாரிசால் நீ திருமகள் கருணையை அடைய நோக்கம் புரிகிறது. அம்மையப்பனின் ஆலயத்துக்கு அருகிலேயே தெற்கிலே ஆகம விதிப்படி யான அமைப்பிலே திருமகள்கேள்வன் உறைவதற்கான ஒரு சிறுஆலயம் தேடிய செல்வத்தால் கட்டுவாய். அதன்பின் உன்னிடம் வந்து குவியும் செல்வத்தால் இல்லார்க்கும் வந்தோர்க்கும் எடுத்தீய்ந்து கொண்டு தக்க சமயத்திலே வந்த வேலை வாகுறஅமைத்துவிட்டு, மன நிறைவோடு இருக்கும் மங்கல நாளிலே, மலையமாருதம் வீசி முனிவர்களையும் புனிதமாக்கி தவங்களுக்கு எல்லாம் தலை நிலமாய்

விளங்கும் இமயமலை சாரலிலே என்னை வந்து சந்திப்பாய் என மறையவர் புகன்றார். "சித்தப்படி நடக்க சிவம் அருளட்டும்! பேற்றை அளித்த பெருமானே! புழுவை புனிதமாக்குங்கள்." என்று பெரியவரின் பாதத்திலே விழுந்து எழுந்தார் நாகவல்லவர். நாகவல்லவருக்கு இப்பொழுது வயது 26

"கர்மம், பக்தி, ஞானம் - மூன்றும் ஒன்றிலடக்கம் ஒன்றும் மூன்றிலடக்கம். கர்மா விதிக்கப்பட்டது. நல்லதாக விளங்க வல்லது, அவனவனுக்கென்று ஏற்பட்ட கர்மம் தவறாது நிறைவேற்றும் திறன் வேண்டும். சொல்வதற்கு விதிக்கப்பட்டவன் சொல்ல வேண்டும். செய்யவிதிக்கப் பட்டவர்கள் செய்ய வேண்டும். ஆங்குதான் கர்மா. உணரப்பட்டது நல்லதாக இருக்கவேண்டும். உணர்ந்ததை உள்ளிருத்தி பார்க்கவேண்டும். அதுவே கர்மா. களர் நிலத்தை வெட்டி சீராக்குவது கர்மம் அல்ல. பயனில்லாத செயல் அது. உணரப்பட்ட கர்மாவை ஒழுங்குர செய்து வந்தால், அதாவது உணரப்பட்ட கர்மா எதுவென்றால், ஒதுங்கி செல்லும்போது ஆலயம் இருந்தால் திரும்பி

வந்து நுழைய வேண்டும். தலையின் மேலே கைகளை கூப்பி "தந்தையே தாயே தனயனைக்காப்பாய்". என்று சொல்லிவிட்டு உன்வேலையில் நாட்டமாய் செல்லலாம். இந்த கர்மமே போதும் உனக்கு. இடைவிடாது இதையே செய்துவந்தால் அங்கு பக்திமிகுந்து பரவ தொடங்கும். ஆண்டவனிடம் ஏற்படும் அதீதமான அன்பு பக்தியாக பரிணமிக்கிறது. ஆண்டவன் உருவத்தை உள்ளே இருத்தி உள்ளமுருகி அவனது திவ்ய நாமாவை கதற வேண்டியதுதான் பக்தி. உள்ளத்திலே பக்தி கலையாமல் அத்தன்மை நிலை பெற்று விட்டால் அங்கு ஞானம் பிறக்கிறது. ஞானம் என்பது என்ன? தீப ஜோதி தெரியுமல்லவா! யாவருக்கும் எளிதில் விளங்கும். எண்ணையை ஊற்றி திரியை தூண்டி விளக்கை எரிக்கிறோம். எண்ணை இல்லாமலும் விளக்கு எரியாது. திரி இல்லாமலும் விளக்கு எரியாது. எண்ணை உன் பக்தியாகவும், திரி கழிமல எண்ணங்களாகவும், அமைந்து நமக்கு புரியவைக்கிறது. தீபத்திலே எண்ணை வற்றவற்ற ஊற்றிக்கொண்டே இருக்க வேண்டும். அம்மாதிரி பக்தி வற்ற விட

கூடாது. பக்தியை நிறைத்துக்கொண்டே இருக்கவேண்டும். அன்பை நினைத்துக் கொண்டே இருக்கவேண்டும். கழிமலமாகிய திரியை அதாவது அகந்தை, கோபம், வஞ்சனை போன்றவைகளை எரித்துக்கொண்டே இருக்கவேண்டும். பக்தி சேர்ந்து கழிமலஎண்ணம் எரிந்தால் அங்கு ஞான ஒலி பிரகாசிக்கும். அதுதான் ஞான தீபம். ஞானம் ஏற்பட்டுவிட்ட நிலையில் தவம், யோகம் ,ஸித்தி எல்லாம் கைவரும் தன்மையிலே அமைகிறது. ஒன்றாகி ஜோதியிலே கலக்கிறது. அருவாகி வெளியிலே பறக்கிறது. திருவாகி இவ்வுலகில் விளங்குகிறது. ஆனால் கருவாகி மட்டும் உள்ளே ஒடுங்காது. ஆகவே நன்மக்களே! கர்மத்தினாலே பக்தி, பக்தியினாலே ஞானம், ஞானத்தினாலே ஒன்றிலே நிலைபெறும் தன்மை." இப்படியெல்லாம் இன்னும் நிறைய பிரசங்கம் நடந்தது.

அன்றைய சுவாதி நக்ஷத்திர பிரசங்கத்திலே நாகவல்லவரின் பேச்சு இவ்வாறு அமைந்தது. இதைக்கேட்க மக்கள் கூட்டம் நிறைந்திருந்தது. சிறிய ஊர். பாமர

மக்கள். என்றாலும் வெளியூர்களிலிருந்தும் மக்கள் குழுமியிருந்தார்கள். இறைபக்தி அவசியம் என்று உணர்ந்து, பொறாமை வஞ்சனையற்ற பக்குவ மனம் வாய்திருந்த படியால் மக்கள் நிறைய கூடி இருந்தனர். அன்றைய பேச்சின் இறுதியிலே, அம்மையின் திருமுன்பு அடியார்கள் திருக்கூட்டம். பெரியவரின் புனித வாயால் இயம்பிய செய்தியை நாகவல்லவர் தன் வாயால் அடியவர்களின் முன்பு விவரிக்கிறார்.

## 7. ஆட்கொண்ட அனுமன்

தெய்வ பொதுக்காரியம், தேவ அருள் பெற்ற நாகவல்லவரின் வாக்கு, ஊரிலுள்ள மக்களின் உறுதுணை, நாகவல்லவரின் வல்லமையைக் கேட்ட இடமிருந்தெல்லாம் கிடைத்த உதவி, வாக்குக்கு மதிப்பளித்த காலம், வஞ்சநையற்ற மக்களின் ஒத்துழைப்பு, வள்ளல்களின் தாராளம், வேலையாட்களின் அறிய தன்னலமற்ற சேவை, எல்லாமாக சேர்ந்து நாகவல்லவரின் விடாமுயற்சியினால் ஓர் ஆண்டிலேயே ஒரு புனித திருக்கோவில் எழுந்து நின்றது.

அளவில் சிறியது, ஆற்றலில் பெரிது. அந்த இறைவனுக்கு பெயர் திருமகள் கேள்வன் (லக்ஷிமி நாராயணன்) திருமகளை தன்னகத்தே கொண்ட ஒன்றாய் இயைந்த உருவம்.குறிப்பிட்ட நன்னாளிலே கோலாகல மான கூட்டத்தின் நடுவிலே நிறைந்த மாந்தர் திருசந்நிதியிலே நிறைந்திருக்க, மறைந்து ள்ள மஹான்களின் ஆசி காற்றிலே கலந்தொலிக்க, வாத்தியங்களின் இசை வான் முட்ட, நாகவல்லவரின் முன்பு திருமகள் கேள்வனின் திருக்கோவில் திருக்குடமுழுக்கு நடைபெற்றது. பெரியவர் குறிப்பிட்ட புனிதப்பணி நிறைவேற நெடுங்காலம் ஆகும் என எண்ணியிருந்த நாகவல்லவர், திருவருளின் துணையால் சீக்கிரமே முடிந்ததை எண்ணி வியந்தார். அன்று காலை புதிய கோயிலின் புதிய தலை வாசலில் நாகவல்லவரின் வல்லமை விரிந்தது. புரிந்த மக்களும், புரியாத மக்களும் நிறைந்தி ருந்தனர். திருமகளின் கருணையையும், போற்றும் திறன் பற்றியும், அவளின் செயல் பற்றியும், நாரணனின் பெருமை பற்றியும், நாம மகிமை பற்றியும், ராம என்ற ஈரெழுத்து

பற்றியும், நீண்ட நேரம் பக்தி பரவசமான பிரசங்கம் நடைபெற்றது.

முடிவிலே மக்கள் கலைந்தபின், மங்கள செல்வனை வணங்கிவிட்டு குடிலுக்கு சென்றார் நாகவல்லவர். ஆனால் வரும்போதே நிம்மதி இழந்த தன்மையை உணர்ந்தார். அவருக்கே புரியவில்லை. மற்றவருக்கு புரியவைத்துக் கொண்டிருந்த பெருமானுக்கே காரணம் புரியவில்லை. உடன் வந்தோரை தக்கபடி அனுப்பிவிட்டு, குடிலிலே தியாநத்தை தொடர்ந்தார்.
நடுநிசி. நிசப்தமான வேளை. திடீரென கூக்குரல்கள். ஊரெங்கும் ஒரே அமளி. தியானம் கலைந்து வெளியே வந்தார். ஒரு கூட்டம் சிவமூர்த்தியை முன்னிட்டு குடிலை நோக்கி வருவதைக்கண்டார். நெருங்கிய கூட்டத்தை வினவினார்.
"ஸ்வாமி, எங்கிருந்தோ குரங்குக்கூட்டம் ஒன்று ஊருக்குள் புகுந்துள்ளன. இந்த இருட்டு வேளையிலே அவைகளை எண்ணி முடியாது. ஒவ்வொரு வீட்டினுள்ளும் புகுந்து கொடிய உபத்திரவம் செய்கிறது. அடக்கமுடியாமல்

குரங்குத்தனம் அத்தனையும் செய்கிறது. வேதனை மிகுந்துள்ளோம்." என்றனர்.

நாகவல்லவர் சிறிது நேரம் ஒன்றுமே பேசாமல் இருந்தார். நாகவல்லவர். பின்பு அவர்களையும் அழைத்துக்கொண்டு, குரங்கு எங்குள்ளது என்று கேட்டுக்கொண்டே சென்றார். நடுவிலேயே ஓரிரு குரங்குகளை யும் பார்த்தார். கூட்டத்தினருடன் புதிய கோவில் தலைவாசலிலே நின்றார்.

"பெருமானே! பிழை பொருத்தருள வேணும். குறை எதேனுமிருந்தால் அதனை கூறி திருத்தவேண்டுவது திருவருளின் தன்மை பிரபு! அறியாமல் செய்த பிழை ஏதுமிருப்பின் பொறுத்து புரியவைக்க வேணும். புண்ணியா! " என வேண்டி நிற்கையிலே அவருக்கு மனதிலே ஒரு நிம்மதி தோன்றியது. உடனே கூறினார்: அன்பர்களே! குரங்குப்படை இப்போது விரைந்து விடும். கவலை வேண்டாம். உள்ளத்திலே வழி உணர்த்தி விட்டான் இந்த உலகளந்தோன்! எனவே நீங்கள் கவலையின்றி உறங்க செல்லலாம் என்று கூறி குடிலுக்கு விரைந்தார் குணக்குன்று. சிறிது நேரத்தில்

குரங்குக்கூட்டமும் வந்த வழியே விரைந்துவிட்டது.



திரும்பியவருக்கு திரும்பவும் தியானம் தொடங்கிற்று. விடியலில் பெரியவர் ஸமாதி இருந்த இடம் நோக்கி விரைந்தார். அந்த இடத்திலே இப்போது ஒரு மாருதி பகவானின் கற்சிலை ஒன்று எழுந்து நிற்கிறது. பார்த்து பரவசமானார். தண்டனிட்டு, திருத்துழாய் எடுத்து தேவனின் தலையிலே சாற்றிவிட்டு, உள்ளமுருகி பிரார்த்தனை செய்தார். "அடியாரை ஆட்கொள்ள திடீரென தோன்றிய வீரா! உனக்கு வணக்கம்." என வாழ்த்திவிட்டு ஊருக்கு திரும்பினார். ஊரிலே இதை விளம்பினார்.

"நாரணன் கோயில் கட்டுவித்தோம். அவனது அடியாருக்கு நாம் தனி கோயில் கட்டவில்லை என்ற கோபம் போலும், அதை உணர்த்துவான்வேண்டி இரவிலே ஒருவன்செயல் புரிந்து எம்மை ஆட்கொண்டான். ஆனால் அவன் சிரஞ்ஜீவி அல்லவா!

மனிதனால் தான் ஸ்தாபிக்கப்படக் கூடாது என தானே தன்னை ஸ்வயம்புவாக அமைத்துக்கொண்டு அருளுகிறான். இது குருவாம் பெரியவரின் அருளாற்றல்." என்று ஊரினருக்கு விளக்கம் கிடைத்தது. அன்றுமுதல் அனைவரும் அங்கும் சென்று பக்தி செலுத்தி வந்தனர்.

## 8. அறம் இரண்டு

நல்லவைகள் நடந்துகொண்டே இருக்க நாட்களும் நகர்ந்துகொண்டே இருந்தன. அன்னாட்களிலே ஒருநாள்:
"மனிதனுக்கு, அவன் செயலாற்றுவதற்கு என விதிக்கப்பட்ட அறம் இரண்டு. ஒன்று இல்லறம், மற்றது துறவறம். இல்லறத்தின் பாற்பட்டது நல்ல மனைவியும், நன்மக்களும். இரண்டிலே எது இல்லையானாலும் அது நல்லதாகாது. இரண்டும் சேர்ந்திருந்து அங்கு திருமகளின் துணை இல்லையானாலும் மகிழ்ச்சி இல்லை. அறிவின் துணையும் பொருளின் துணையும் மனைத்துணையும் எங்கு சேர்ந்து அமைந்து இருக்கிறதோ அங்கு

மங்கலமான இல்லறம் மகிழ்ச்சியோடு நடைபெறும்.

நல்ல வழியிலே பொருளீட்டி அதை இல்லார்க்கும் வந்தார்க்கும் எடுத்தீய்ந்து தரும நெறி வழுவா கருமங்களை செய்து, கடமையே கருத்தாய் உடமையெல்லாம் உன்னதாக கருதி செயல் படுவதே கருத்துள்ள இல்லறம். இனிது முடிந்த இல்லறத்தின் பின்பு கடிதாய் துவங்கும் துறவறத்தின் முடிவிலேயே துணைவன் தோன்றுகிறான். என்று நீ பெற்றிருப்பதை துறப்பது? நாம் பெற்றுள்ளது என்ன? என்று வினா எழும்பும் இடத்திலே விடையாக அமைகின்றது ஏராளமான ஆராய்ச்சி முடிவுகள். எவ்வாறு இருப்பினும் மனிதன் பெற்றுள்ளது என வரும் போது அவன் உடலோடு, உள்ளதோடு பெற்றிருப்பதைத்தான் குறிக்கிறது. ஆனால் அவனால் அவனது முயற்சியால் பெறப்படும் வீடு, மாடு, தனம், மக்கள், மனைவி, நட்பு, நாடு இவைகளை குறிக்காது. உயிரோடும் உடலோடும் ஒட்டிப் பிறந்தது என்ன? அதாவது துறக்கப்பட வேண்டிய செயல் என்ன? அதாவது துறவி என்ற சொல்லின் இலக்கணம் என்ன? என நோக்குமிடத்து தான்

என்ற தன்மை, கோபம் என்னும் குணம், உலக இன்பத்திலே வைத்திருக்கும் பற்று, பிறர் பொருளின் மீது ஏற்படும் ஆசை, இவைகளை எல்லாம் அறவே துறப்பதே ஆகும். பின் மிகுந்துள்ளது என்ன? ஏகாந்தம், இறைஉணர்வு, தொண்டுமனம், தூயஉள்ளம் இவைகளை வைத்துக்கொண்டு துறவற வாழ்க்கையை தூயதாய் செய்து கொள்ளலாம்."

இவ்வாறு அன்றைய தினம் இல்லறத்திற்கும் துறவறத்திற்கும் உள்ள தொடர்புகளை விளக்கி சொற்பொழிவு ஆற்றி பக்குவமாய் மக்களுக்கு புகல வைத்தார் நாகவல்லவர். அன்றைய பிரசங்கத்திற்கு அயலூரில் இருந்து எல்லாம் நிறைய மக்கள் வந்திருந்தனர். அவர்களில் அனேகர் நாகவல்லவருக்கு நேரிலேயே பரிச்சயமானவர்களாகவும் இருந்தனர். இந்த பிரசங்கம் முடிந்த அளவிலேயே மக்கள் கலைந்தனர். ஆண்டவனுறை திருக்கோயிலை உடைய ஒரு புனித ஊரிலிருந்து வந்திருந்த இரு நண்பர்கள் பிரசங்கம் முடிந்து குடிலுக்கு திரும்பிய அவரிடம் வந்து வணக்கத்தை

செலுத்தி பேசும் மனத்தோடு பேசாமல் என்றனர். வந்தோரை அமர்த்தி "இரவு இருட்டான பொழுதிலே விரைந்து செல்லாமல் நெருங்கி வந்த காரணம் என்ன அன்பர்களே" என்றார் நாகவல்லவர். வந்த ஒருவர் "சுவாமி உங்களிடம் ஒரு செய்தி சொல்ல வேண்டும் என்று நினைத்து பலநாட்களாக எண்ணி கொண்டுவருகிறேன். ஆனால் எவ்வாறு சொல்வது என்றும், சொல்லிவிட்டால் சொன்னதால் ஏற்படும் முடிவு நன்மையா அல்லது விருப்பத்துக்கு மாறாக ஆகிவிடுமா என்றெல்லாம் சிந்தித்து சிந்தித்து குழம்பி கொண்டிருக்கிறேன். அதை கூறும்படியான திட சித்தம் எனக்கு இப்போது இருப்பதாக நானே எண்ணிக்கொண்டு உங்கள் முன்பு வந்திருக்கிறேன்" என்று சொன்னார். நிதானமாக கேட்டுக் கொண்டிருந்த நாகவல்லவர் "அன்பரே சொல்வதைப் பற்றி குழப்பம் வேண்டாம். சொல்வது நல்ல சொல்லாக இருக்க வேண்டுயன்றி மற்றதை நினைத்து குழப்பம் கூடாது. நீர் எண்ணிய செயல் எதுவாக இருந்தாலும் அதை திண்ணமாய் இங்கு எடுத்து இயம்பலாம்" என்ற உறுதியான

நாகவல்லவரின் சொல்லைக்கேட்ட உடன் முன்பு பேசிய அன்பர் மறுபடியும் பேசுகிறார். "சுவாமி சொல்லிலே பிழையிருந்தால் பொறுக்க. தங்களை துறவி என்று கூறவும் என் மனம் துணியவில்லை. ஆனால் இல்லறம் நடத்த வல்லவர் என்று என்னால் எண்ண முடிகிறது. எண்ணத்திலேயே பிழை இருக்கலாம். மன்னித்தருள வேண்டுகிறேன். இதனை ஏன் முன்பே சொல்லவில்லை என்றால் என் சுயநல எண்ணம்தான் காரணம். முழுவதையும் சொல்லி விடுகிறேன். நான் பெற்ற மகள் பேச வந்த பருவம் முதல் பரமனின் சிந்தனையோடு பாட்டாலும் பேச்சாலும் அவனை வாழ்த்திக் கொண்டு வளர்ந்து வருகிறாள். அவளுக்கு மணம் புரிய முயன்றேன். முயன்ற காலத்தில்தான் அது கடினமான திருமணமாக இருக்குமேயன்றி மனமொத்த மங்களமாக அமையாது என தெரிந்தது. அதன்பின் கடவுள் செயல் எவ்வாறு அமைகிறதோ அவ்வாறு நடக்கட்டும். நமது முயற்சியால் யாதும் நடவாது வாழ்ந்து வருகிறேன். ஆனால் தங்களது அருமை பெருமைகளை எல்லாம் கேட்டு, தங்களை

கண்ட அன்று முதல் என் உள்ளத்திலே ஒரு உணர்ச்சி வேகம் உந்திக் கொண்டு இருக்கிறது. எனது மகள் - அப்படிச் சொல்வது பிழை என்றே எண்ணுகிறேன் அவள் இறைவனுக்கு உரியவள் சாதாரண மனிதன் அவளை கொள்வது என்பது புற்றில் கையை விடும் புத்திசாலித்தனத்தை ஒக்கும்.

அடுத்த சுக்கிரவார புண்ணியதினத்திலே அவளை அம்மையின் திருமுன்பு அழைத்துக் கொண்டு வருகிறேன். அப்பனுக்கு முன் அமர்ந்து இருக்கும் தாங்கள் அவளை கண்டு தக்கதுகூறி என் மனதை அமைதியுற செய்ய வேண்டும். முதலில் தங்களை பற்றிய ஆராய்ச்சியில் ஏன் இறங்கினேன் என்றால், தங்களை துறவி என்றும் நிச்சயமாக எண்ண முடியவில்லை. பிழை பொறுக்கவேண்டும். தங்களது அனுமதி இன்றியே அவளை இவ்விடம் கொணர்ந்து நிறுத்திவிடுவேன். ஆனால் தங்களது உத்தரவு அன்னியில் அவளை தங்களின் திருமுன்பு கொண்டுவரக்கூடாது என்பதற்காகவே இத்தனை தயவான வார்த்தைகளை உங்களிடம் சொல்லுகிறேன். என்று கூறி

மென்மையாய் நின்றார். சிறிது நேரம் மௌனமே நீடித்தது. பின் நாகவல்லவர் "நண்பரே ஆண்டவன் விருப்பம் அதுவாக இருப்பின் தடுக்க யாரால் இயலும். எடுக்க குறையா அருளை அடைய எம்பிரானின் முன் கொண்டு வாரும் உமது மகளை." என்று திருவாய் மலர்ந்தார். அன்பரின் முகத்திலே ஆனந்தம் தாண்டவம் ஆடியது. மகிழ்ச்சி பெற்ற உள்ளத்தோடு விடைபெற்றுக் கொண்டு சென்றார் நாகவல்லவரிடம்.

## 9. குலமும் குமாரியும்

நாகவல்லவரின் விஷயத்திற்கு குலம் குறிக்கப்படவில்லை. கோத்திரம் குறிக்கப்பட வில்லை. ஆனால் அவரை வந்து வணங்கிய அண்டிய அடியார்களின் குலமும் கோத்திரமும் குறிக்கப்படுகிறது ஏன் என்று விளம்பினால், இதோ அதற்கு பதில்.

சிவன்-சக்தி இருவரும் எந்த ஜாதியை சேர்ந்தவர்கள். புராணங்களிலும் பண்டைய வரலாறுகளிலும் சிவன் சிவமதம் என்றும் அவன் பக்தனுக்கு சிவபக்தன் என்றும், சிவ

மார்க்கத்தை உடையவன் என்று புகழப்படுகிறது. சக்தி பாற்கடலில் பள்ளி கொண்ட பரந்தாமனின் அதாவது வைணவக்கடவுளின் தங்கை, சிவமதப் பெருமானை மணந்து கொள்கிறாள் என்பது விளங்குகிறது. ஒன்றான தேவதைக்கு பல உருவமாக்கி, மனிதனை போன்ற பந்த பாசங்களை அவனுக்கும் அழைத்து அவனுக்கு மதம், குலம், ஜாதி என்ற பாகுபாடுகளை உண்டுபண்ணி, மனிதனோடு மனிதனாக நினைத்து பார்க்கும் தன்மையை நம்மில் நாமே உண்டு பண்ணிக்கொண்டு இருக்கிறோம். அவன் மதமற்றவன். குலமற்றவன். வர்ணமற்றவன். அதற்கு சான்று அவனே நிறைய கூறியிருக்கிறான் தன்திருவிளையாடல்கள் மூலமாக. சண்டாள குலத்திலே ஜனித்து சபைதனில் ஆடும் சபேசனை சேரவில்லையா ஒருவள். அங்கு குலத்தைக் கண்டா அவன் ஏற்றுக் கொண்டான். வைணவ திருப்பதியாம் திருவரங்கம் கொண்ட நாதன், கீழ் சாதியில் பிறந்த பாணனை தலைசிறந்த வைணவன் எனச்சொல்லி கொண்டிருந்த நாமதாரிகளின்

முதுகில் ஏற்றி தன்னிடம் அழைத்துக் கொள்ள வில்லையா! அங்கு ஜாதியை பார்த்தானா அந்த இறைவன். ஆகவே அவனுக்கு பரமனுக்கு மதமில்லை, குலமில்லை. அதுபோல பரமனின் அடியார் களுக்கும் மதமில்லை. சாதியில்லை. ஏன் இவ்வாறு துணிந்து கூறப்படுகிறது என்றால் பரமனுக்கு மேல் அடியவர்களின் புகழ் புகழ்ந்து பேசப்படும் தன்மையினால் தான்.

மறுநாள் சுக்கிரவார புண்ணிய தினத்திலே சொல்லியிருந்தபடியே அன்பர் தம் ஸ்வர்ணகுமாரியை கொண்டுவந்து நிறுத்தினார் திருமுன்பு. அவளுக்கு "சுந்தரகுமாரி" என்ற நாமத்தை வைத்திருந்தார் அவரை பெற்றவர். இவர்கள் கோயிலை அடைந்த பின்பே நாகவல்லவர் வந்தடைந்தார் இறைவழிபாட்டை இனிதே முடித்துக் கொண்டு. திரும்பிய அவருக்கு அருகில் பெண்ணைப் பெற்றவர் நின்று கொண்டு பெண்ணை காட்டினார். அடிபணிந்து எழுந்தாள் சுந்தரகுமாரி. "பெண்ணே உன்னை பற்றி உன்னைப் பெற்றவர் என்னிடம் சொன்னார். தக்க

வயதிலேயே திருமணம் செய்து கொண்டு இல்லறம் நடத்துவது தர்மம் அல்லவா! தருமத்திற்கு துணை செய்ய வேண்டுவது பக்தியுடைய உனது கடமை அல்லவா! தோன்றும் எண்ணத்தை கூசாமல் சொல்லு." என்று நாகவல்லவர் விளம்பினார் அப்பெண்ணை நோக்கி. சுவாமி! என் மனம் சதா இறைவனையே நாடுகிறது அவனது குணத்தையே கொண்டாடிக் கொண்டிருக் கிறது. இல்லறத்தில் நாட்டம் கொள்ள வில்லையே சுவாமி!" என்றாள் அவள். "பெண்ணே! ஆண்டவனை நீ சத்தியமாய் நம்புகிறாய் அல்லவா" "ஆம் சுவாமி கண்டிப்பாக நம்புகிறேன்" "ஆண்டவன் வேதத்தை நம்புகிறாயா" "ஆம் சுவாமி அதையும் நம்புகிறேன்" அந்த வேதங்களில் பெண்களின் தர்மம் பற்றி உனக்கு தெரியும் தானே! "நான் வேதங்களை படித்ததில்லை" "சரி படித்தவர் இருக்கிறார் என்பதையும் நம்புகிறாயா?" "கண்டிப்பாய் நம்புகிறேன் சுவாமி" "அதை நான் படித்திருப்பேன் என்பதை நீ ஒத்துக் கொள்கிறாயா" "ஓ! தாராளமாக!" "வேதங்களை ஓரளவு படித்துள்ள நான் அதிலுள்ள பெண்ணின்

முக்கிய கடமை ஒன்று உணர்த்தப் பட்டிருப்பதை இப்போது சொல்கிறேன் கேள். அதாவது குறிப்பிட்ட வயது வந்த பின்பு பெண்கள் பெற்றோர் தேர்ந்தெடுக்கும் ஒருவனை மணந்து கொண்டு இல்லறம் துவங்கவேண்டும் என்பது. அதைப்பற்றி நீ என்ன சொல்கிறாய்? ஏனென்றால் நீ வேதத்தையும் நம்புகிறாய், வேதம் படித்தவனையும் நம்புகிறாய். அவன் சொல்வதை நம்ப வேண்டாமா? நம்புகிறாயா? நம்பி நடக்கிறாயா?" "சுவாமி வேதத்தை நம்புகிறேன், உங்களையும் நம்புகிறேன், உங்களது வாக்கையும் நம்புகிறேன், என்னால் இல்லறத்தை மட்டும் நம்ப முடியவில்லை சுவாமி!" "பெற்றோர் காட்டும் மனிதன் உனக்கு பிடிக்கவில்லையா அல்லது அவன் உனக்கு தகுதியில்லை என நீ எண்ணுகிறாயா?" "அறியும் திறமை எனக்கு கிடையாது சுவாமி. ஆனால் இப்போது என் உள்ளத்திலே ஒரு சலனம். பெற்றோர் கூப்பிட்டு எங்கும் செல்லாத நான் இன்று கூப்பிட்ட உடன் இந்த சன்னதியை அடைந்து இருக்கிறேன். ஒரு மனநிம்மதியை இங்கு நான் உணருகிறேன். மனம் நிறைந்த ஒரு

மனிதரையும் கண்முன்னே காணுகிறேன்." என்று கூறிக்கொண்டே நாகவல்லவரின் பாதங்களில் வணங்கி எழுந்தாள்.

வணங்கி எழுந்த வனிதை முகத்தை விருப்பமுடன் நோக்கினார் நாகவல்லவர். "பெண்ணே மாயா பந்தங்களினால் பிணைக்கப்பட்டுள்ள மாந்தர்கள் தர்மங்களை வழுவாது செய்து வரத்தான் வேண்டும். தர்ம நெறியே பரமன் அருள். உன் மனசலனத்தை எவ்வாறு நிறுத்தப்போகிறாய்." என்றார் நாகவல்லவர். "சுவாமி இத்தருணத்தில் செய்வது எது? செய்யக்கூடாதது எது? நடப்பது- நடக்கப்போவது எது? என்றெல்லாம் சிந்திக்கும் மனநிலையில் நான் இல்லை. எனக்கு செய்யத்தக்கதருளி சேருமிடம் சேர்க்கவேண்டும் சுவாமி" என்று வேண்டி நின்றாள் அந்த வனிதை.

சுபமாக நடக்க வேண்டிய செயல்கள் சீக்கிரமாக நடக்க வேண்டி செயல்படுவது போல, வரலாற்றின் சுபமான கட்டத்திலே நாமும் சீக்கிரமாக செல்லுவோம். சகலவித மங்களங்களும் வாய்க்கப்பெற்ற நல்ல தினத்திலே, இறை உணர்வு பெற்ற இளம்



உள்ளங்களை கொண்ட நாகவல்லவருக்கும், சுந்தர குமாரிக்கும், கல்யாண குணங்களை அருளும் கல்யாணி அம்மையின் திருமுன்பு, கோலாகலமான கூட்டத்தின் மத்தியில், குமரனும் வள்ளியும் கூடி அமர்ந்தது போலுள்ள அமைப்பிலே திருமணம் இனிதே நடந்தது.

மலைமகளோடும் கலைமகளோடும் இப்பொழுது திருமகளும் சேர்ந்து விட்டாள். இனிதான இல்லறத்தை இனிதே நடத்திக் கொண்டும், புதிதாக வந்த புதுமை மங்கை யோடு ஒற்றிக்கொண்டும், சுவாதிவிண்மீன் தின பிரசங்கமும் விரிவான முறையிலே நடத்திக்கொண்டுவந்த நாகவல்லவரின் வாழ்க்கையிலே மேலும் எட்டு ஆண்டுகள் கழிந்தன. இந்த எட்டு ஆண்டுகள் இல்லறத்தில் வந்து குவிந்த பொருட்கள் ஏராளம். அவர் வாரி வழங்கிய பொருட்களும் ஏராளம். அவரிடம் மிகுந்து இருப்பதும் ஏராளம். ஐந்துகாத சுற்றளவுக்கு அவரது

அருமை பெருமைகள் பரவி இருந்தன. அதைத் தாண்டியும் சில இடங்களில் இவரது பெருமை பேசப்பட்டு கொண்டிருந்தது. அதை கேள்விப்பட்ட அளவிலே நெடுந்தூரமிருந்தும் வந்துகொண்டு இருந்தனர் மக்கள். அப்படி வந்து கண்டு சென்ற மக்களுள் ஒருவர்தான் சுதர்சனம் என்பவர். அவருக்கு மைசூருக்கு அருகில் எதுகிரி என்பது சொந்த ஊர். தீர்த்த யாத்திரை நிமித்தம் கிளம்பிய அவர் பல இடங்களை தரிசித்து விட்டு திரும்பியபோது நாகவல்லவரின் பெருமையைக் கேட்டு புகுந்தார் இந்த ஊரிலே. கண்டு சந்தித்தபின் கருத்து ஒருமித்தனர் இருவரும். ஞானக்கண் பெற்றிருந்த நாகவல்லவர் அந்த தீர்த்த யாத்திரை பெரியவர் சுதர்சன் என்பவருக்கு அவர் அறியாத ஓர் செய்தியை சொல்லி அவர் அவரை திகைக்க வைத்து, அவரை அவரின் ஊருக்கு உடன் அனுப்பி வைக்கிறார். சென்ற பின் தான் உண்மை புலப்படும் என்று கூறி அவரை வழியனுப்பி வைத்தார் நாகவல்லவர்.

அன்றிலிருந்து ஒரு ஆண்டில் நாகவல்லவர் அவர்தம் தர்மபத்தினி சுந்தரகுமாரி ஒரு செல்வக்குமரனை ஈன்று எடுத்தாள்.

நாகவல்லவரின் குழந்தைக்கு வல்லமையை ஊட்ட வேண்டுமா? வந்தமையை பெற்றுக் கொண்டு நிகரில்லாத தன்மையோடு பாலன் வளர்ந்து வருகிறான். உடன் ஒரு பெண்ணையும் பெற்றாள் அப்புனிதவதி. நாகவல்லவரின் பையனக்கு வயது 5. பெண்ணுக்கு வயது ஒன்று.

## 10. இல்லறம் முடிந்து வல்லமை கூடல்

குறிப்பறிந்து ஒழுகும் குணம் கொண்ட மனைவியை கொண்டுள்ள காரணத்தாலும், நற்குணம் கொண்ட நன்மக்களைப் பெற்றுள்ள காரணத்தாலும், கொண்ட நல்லறம் நல்லறமாய் நடந்து வந்தது. மிகுந்துள்ள பொருள்களால் மிகுந்த சக்தியுடைய அம்மையப்பனின் ஆலய த்தைச் செப்பனிட்டு பழுது பார்த்து புனிதப்படுத்தினார். திருக்கோயில் குடமுழுக்கு நடைபெற்றது. அதன் பின் நாகவல்லவரின் மனம் பின்வருமாறு எண்ணியது:

பரமானருள் பெரியவர் தொடர்பை கூட்டியது பெரியவர் கூடலால் அரிய செயல் அறிந்து வல்லமை விரிந்தது. விரிந்த வல்லமையால் திருக்கோயில்கள் எல்லாம் விளங்க ஆரம்பித்தன. கோயில் விளக்கத்தால் குரங்கோன் ஆட்கொண்டான். ஆட்கொண்ட அவனால் மீட்கப்பட இருக்கிறேன் இப்போது. விரும்பிய உடனே புதரை விட்டு வெளியேற முடியாதபடி பந்தபாசத்தால் கட்டுப்பட்டு இருக்கிறேன். உதறிவிட்டு செல்லும் நாளை உணர்த்த வேண்டும்...... என்று வேண்டி நின்றார் அம்மையப்பன் திருமுன்பு. நிற்கும் அந்த தருணத்திலேயே நெருங்கி வந்தனர் அருமை அடியார்கள் சிவமூர்த்தியும் நனிநாயகரும். "செய்த செயல் யாவற்றிலும் சேர்ந்து உழைத்து பெருமை கொடுத்தீர். பிரியும் காலத்தில் புரியும் செயல் எவ்வாறு? என்றார் நாகவல்லவர் . "ஓடி உழைத்த எங்களை தேடும்படி விடாதீர்கள் சுவாமி! நடந்தால் கூட வரும் நிழல் நாங்கள். இங்கேயே நிறுத்திவிடாதீர்கள்." என்று வேண்டினார்கள் இருவரும். அம்மையப்பன் பிரார்த்தனைக்கு பின் பிரிந்தனர் மூவரும். தன் இருப்பிடத்திற்கு வந்த நாகவல்லவர்

குடிலுக்குள் நுழைந்து குழந்தையை தூக்கிக்கொண்டு, பத்தினியையும் அருகில் அழைத்து பின்வருமாறு புகன்றார்.

"அன்பே இல்லறத்தை ஏற்ற அளவில் படித்த என்னை செயலில் அடைந்து சிறப்புமாறு செய்யத்தூண்டிய கடவுளுக்கு காரணமாய் நின்றனை நீ. இதனால் என் இல்லற வாழ்வுக்கு காரணம் நீயாக அமைந்து இருக்கிறாய். ஆகவே ஒரு தர்மத்திற்கு மட்டும் காரணமாய் நீ இல்லாமல் துறவறத்துக்கும் காரணமாய் அமைந்து விடுவாய் என்பதை இறையுணர்வு உடைய உனக்கு நான் உணர்த்த தேவையில்லை! புரிகிறதா நான் சொல்வது?" "தெய்வமே காரணத்தை காரணம் காட்டி என்னை நிறுத்தும் காரணம் புரிகிறது சுவாமி! இறைபக்தி நெஞ்சத்தோடு இருந்தவளை பக்குவப்படுத்தி, மெய்த்தவ நிலைக்கு முற்ற வைத்திருக்கும் நற்றவப்பெரியோய்! நம் செயலால் எதுவும் நடவாது, அவன் செயலால் நடப்பதும் நமக்கு தெரியாது, ஆகையால் நடப்பதெல்லாம் அவன் செயல் என்று இருக்கவேண்டி நமது வாழ்க்கை அமைந்து விட்டது என நம்பிய எனக்கு இறைவாக்கே மறை வாக்கு.

எவ்வாறு தாங்கள் சொல்கிறீர்களோ அவ்வாறு நடக்கிறதே இவளின் செயல்." என்று கூறி சுந்தரகுமாரி வேண்டி நின்றாள். "பெண்ணே வருகிற உத்திரநக்ஷத்திரத்தில் அன்று என் குருநாதராம் பெரியவரைக் காண செல்கிறேன். மிகுந்த செல்வத்தை நல்ல முறையில் எடுத்தீய்ந்துவிட்டு, அறநெறி வழுவா கருமங்களை ஆற்றுவதன் மூலம் நீ இறைவனடி சேர்வாய். நம் மக்களும் உலக மக்களோடு சேர்ந்து அவர்களில் ஒருவராக வளர்ந்து வாழ்வார்கள்." என நாகவல்லவர் விளம்பியதை கேட்டாள் சுந்தர குமாரி. பெண்ணின் உள்ளம் அல்லவா! சிறிது கலக்கம் ஏற்படத்தான் செய்தது.

அன்று உத்திரநக்ஷத்திரஉச்சம். அதி காலையிலேயே மனைவியும் குழந்தையும் துயிலெழுமுன்பே நாகவல்லவர் எழுந்து கிளம்பி விட்டார் வடதிசையை நோக்கி. கொடுத்த வல்லமை வா என்று அழைத்தது. கொண்ட வல்லமை ஓடிச் செல்கிறது. கொடுத்ததும் கொண்டதும் ஒன்றாய் இணைகிறது. பனியும் குளிரும் ஒன்றாய் எய்த, அந்தப்பனி மலைச்சாரலிலே

கொடுத்ததும் கொண்டதும் ஒன்றாய் கூடி உறவாடி நிற்கும் நேரத்திலே, வந்த விதம் எப்படி? என பெரியவர் கேட்டார் .அதற்கு "பெண்டு பிள்ளைகளை விட்டு புறப்பட்டு வந்தேன்". என்றபோதில் பெரியவர் சினம் கொண்டு சீறி எழுந்தார். பெரியவரின் சீறி வந்த சீற்றம் பின்வரும் சாபமாக மாறி வெளியேறியது.

"வல்லவா! இல்லறம் செய்ய தூண்டி உன்னை வேண்டி வந்தேன். ஆனால் ஞானம் பெற்றிருந்தும் நீ அக்ஞானம் கொண்டு அங்கேயே தங்கி நீண்ட நாள் வாழ்ந்து இருக்கிறாய். உன்னை நான் ஒரு முக்கிய காரணமாக முந்தியே எதிர்பார்த்தேன். நீ வரவில்லை. இப்போது மனைவி மக்களை விட்டு கிளம்பிய நீ அவர்களை உண்மையிலேயே விட்டவனாய் வந்து நிற்கிறாய். அவர்கள் இறந்து இன்னும் பத்து நாட்கள் கூட ஆகவில்லை. கைக்குழந்தை தண்ணீராலும் முந்திய குழந்தை அம்மை நோயாலும் உன் மனைவி மாரடைப்பாலும் இந்த உலக இன்பங்களை விட்டனர். அன்று நான் சொல்லியபடி நீ நடந்திருந்தால் இந்த துயர சம்பவம் நிகழ்ந்திராது. நீ நடந்ததை

நினைத்துக்கொண்டு நடப்பதில் நழுவுதல் கூடாது. குரு வாக்கியத்தை மீறிய குற்றத்தை நீ அறிந்து கொண்டு விட்டாலும் உலகம் அறிய வேண்டுமல்லவா! ஆதலால் உன் திறமையால் விளங்கப்பட்ட எல்லாம் விளங்கப்படுவதற்கு காரணமாய் உள்ள தெல்லாம் "நீ" என்பது சிறிது காலம் மங்கி மறைந்து இருக்கக்கடவது. இந்த செயல் எல்லாம் பரமன் அருளால் பரவும் காலம் 250 ஆண்டுகளுக்கு பின்னால் தான்." என்று கூறினார் பெரியவர் இதைக் கேட்ட பொழுதிலே நாகவல்லவருக்கு ஏற்பட்ட வருத்தம் சொல்லில் அடங்காது. "சாபத்தின் தன்மையை குறைக்கவேண்டும். தவறு செய்தது நானாக இருக்கலாம். அதற்கு தெய்வ சாந்நித்தியத்தை குறைக்க வேண்டாம் என வேண்டிக் கொள்கிறேன். என வேண்டி, "குருதேவா! என்று அவரது திருவடிகளிலேயே வணங்கி வேண்டி நின்றார். "தெய்வ சாந்நித்தியத்தை குறைத்தால்தான் உன் திறமைகளை உலகம் மறக்கும் .சாந்நித்யம் எழும்பும் காலம் வெகு தூரத்தில் இல்லை அல்லவா! என்று உன்னால், பிரசங்கமுறைகளினால் மக்களை கவர்ந்த

மங்கள சன்னதியில், மக்களை கவரும் வண்ணம் மறுமுறை "நீ இன்றி" மங்கல நிகழ்ச்சி நடைபெறுகிறதோ அன்று தினம் முதல் அந்தக்கோயில் திருச்சன்னிதியும் மற்றுமுள்ள உன்னால் விளங்கப்பட்ட ஸன்னதிகளும் விளங்க துவங்கும். உன்னைப் பற்றிய வரலாறும் உலகில் தெரிய விளங்கும்," என்று அருளினார் அந்தப் பெரியவர். ஏகாந்தமான மலைச்சாரலில் மன அமைதி அடைந்த இரு உள்ளங்களும் ஒன்றுகூடி நன்கு அமைந்தன.

## முடிவுரை:

அருளப்பட்ட வரலாறு எங்கு நடந்தது? இவ்வரலாறு அருளப்படுவதற்கு காரணம் என்ன? எத்தன்மையால் எம்முறையில் எப்படி இவ்வாறு அருளப்படுகிறது? அருட்சக்தியாக இயங்கும் சித்தருளுக்கும் கல்யாண சுந்தரிக்கும் இந்த வரலாற்றுக்கும் என்ன தொடர்பு? இவ்வரலாறு முற்றிலும் நடந்த உண்மை நிகழ்ச்சியா? அல்லது அருட்சக்தி யால் உண்டாக்கி வைக்கப்படும் ஒரு புராணமா? இந்த வினாக்களுக்கு விடை யளிக்கும் கடமையும் திறமையும் அருட்சக்திக்கு உண்டு. இவ்வினாக்களுக்கு வேண்டிய விளக்கங்களையெல்லாம் தனி ஒருவருக்கு சொல்லி திருப்தி படுவதை விட பொதுமக்கள் கூட்டத்தில் புகலவே விருப்பம். விளக்கம் தேவையானால் கூட்டம் காட்டலாம். விளக்கம் வேண்டும் திறத்தை வேதன் அருளட்டும்!

ஓம் சக்தி